# ஞானசம்பந்தம்

மலர் 10.] கரஞ சித்திரைமீ 10—5—51. [இதழ் 6

## மாயூரத்தில் கட்டப்பெற்றுள்ள பிரஸவ ஆஸ்பத்திரி




காலத்தின் தேவைகருதி, பெரும்பொருட் செலவில் ஆதீனம் ஆற்றிவரும் பணிகளுள் இது தலைசிறந்த ஒன்று. 29—11—1943ல் தொடங்கப்பெற்ற இப்பணி, முற்றுப்பெறும் நிலைக்குவந்துவிட்டது. அண்மையில் திறப்புவிழா நடைபெற இருக்கிறது. மடாலயங்கள் உயிர்வளர்ச்சியோடு உடல்வளர்ச்சிக்கும் ஆவன புரிந்து வருகின்றன என்பதனை இது அறிவிக்கின்றதன்றோ! 'உடலார் அழியின் உயிரார் அழிவர், திடம்படஞானம் சேரவும்மாட்டார்' -திருமந்திரம்

ஆசிரியர் : காகலிங்கத் தம்பிரான்.
கவி ஆசிரியர் : ச. தண்டபாணி தேசிகர்.
தருமபுர ஆதீனம்.

## சீகாழியில் திருமுறைத் திருவிழா.

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானத்தில் சென்ற இரண்டாண்டுகளாக நடந்தது போலவே மூன்றும் முறையாக இவ்வாண்டும் சிறந்த முறையில் திருமுறைத் திருவிழா 13—4—51 முதல் 18—4—51 முடிய ஆறு நாட்களிலும் கொண்டாடப் பெற்றது. திருமுறைகளைப்பற்றிப் பதினெண்மறிஞர்கள் பாங்குறப் பேசினர்கள். சீகாழி பெருநிலக்கிழார் திரு S. சுப்பராய முதலியாரவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்து அறவுரை நிகழ்த்தினர்கள். சீகாழி திரு. K. அரங்காச்சாரியார் B,A. B.T., அவர்கள் திறப்புரை நிகழ்த்தினர்கள். தேவஸ்தானத் தேவார வகுப்பு மாணவ மாணவிகளும், சபாநாயக முதலியார் நடுநிலை, உயர்நிலைப்பள்ளி மாணவர்களும் திருமுறையைப் பற்றி உரையாடல்களைச் சிறப்புற நிகழ்த்திக் காட்டினர்கள். 18—4—51 திருமுறை நிறைவு விழாவன்று இரவு திருமுறை ஏட்டுச்சுவடிகளை யானைமீது எழுந்தருளச் செய்து திருமுறைப் பாராயணத்துடன் வீதிவலம் செய்விக்கப்பெற்றது. பல மக்கள் கண்டு களித்தனர்.





உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

ஸ்ரீ ஞானம்பிகா சமேத ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி கோயில்

# மஹோத்ஸவப் பத்திரிகை.



ஸ்ரீ ஞானபுரீசுவரர் ஆலயம்.

18—5—51 முதல் 27—5—51 முடிய

## திருநெறிய தெய்வத் தமிழ்மாநாடு நடைபெறும்.

Page number not counted

உ
சிவமயம்

## சிவபெருமான் துதி

சீர்கொண்ட ஆனந்த மாகி எங்கும்
செறிவாகிப் பரமாகித் திரம தாகி
ஏர்கொண்ட கருணைதிரு வுருவ மாகி
எழில்கொண்ட மலைமகளை இடத்திற் கொண்டோன்
கார்கொண்ட நிறங்கொண்ட முகுந்த னாதிக்
கடவுளர்வந் தடிபரவும் கடவுள் கொன்றைத்
தார்கொண்ட முடியனவன் அடியைத் தாழ்ந்து
தாழாத பெருங்கதியில் வாழா நிற்பாம்.

தருமபுர ஆதீன ஸ்தாபகர்

## குருஞானசம்பந்த தேசிகர் தோத்திரம்

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்
தாரணிஅன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழில் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பார்புகழும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

—சம்பந்தசரணாலயர்.



உ
குருபாதம்



பெருங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் ஆன்மாக்கள்மீதுவைத்த எல்லையில்லாப் பெருங்கருணையினாலே, காணாத அருவினுக்கும் உருவினுக்கும் நிகழ்குறியாம் சிவலிங்காதி திருவுருக்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற தலங்கள் பலவற்றுள், இந்திரன் அகஸ்தியர் தருமன் ஆதியோர்களால் பூசிக்கப்பெற்றதும், காவிரி முதலிய தீர்த்தங்களால் சிறப்புற்றதும், வில்வாரண்யமென்னும் சிறப்புத் திருநாமம் உற்றதும், குருக்ஷேத்திரமும் ஆகிய தருமபுரத்தின்கண் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ ஞானாம்பிகாசமேத ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமிக்கு நிகழும் கர ஆண்டு வைகாசித் திங்கள் 3-ம் நாள் (17—5—51) குருவாரம் தொடங்கி மஹோற்சவம் நிகழும்.

திருநாட்களில் திருநெறிய தெய்வத் தமிழ்மாநாடும், இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெறும். சிவநேசச் செல்வர்கள் யாவரும் வந்திருந்து, திருவுலாக்காட்சியைத் தினமும் தரிசித்து, சமயச்சொற்பொழிவுகளைக்கேட்டு இன்புறுமாறு விரும்பும்,

திருக்கயிலாய பரம்பரைத்
தருமபுர ஆதீனம் கார்பார்,
**சொக்கநாதத் தம்பிரான்.**

தருமபுர ஆதீன மடாலயம்,
கர௵ சித்திரை 20.

# திருநாள் விபரம்

| 1951ஞு மேயீ | கரஞு வைகாசீ | வாரம் | திருநாள் | உற்சவ விபரம் |
|---|---|---|---|---|
| 16 உ | 2 உ | புதவாரம் | | பூரநக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 35-45 க்குமேல் 41-15 க்குள் தனுர் லக்னத்தில் அனுக்ஞை, விக்னேசுவரபூஜை, வாஸ்துசாந்தி, மிருத்ஸங்கிரணம், அங்குரார்ப்பணம், ரக்ஷாபந்தனம். |
| 17 உ | 3 உ | குருவாரம் | 1 | உத்திரநக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 10-36க்குமேல் 15க்குள் கடக லக்னத்தில் ஸ்ரீஞானம்பிகா சமேத ஸ்ரீஞானபுரீசுவரசுவாமிக்கு மஹோத்ஸவ **துவஜாரோகணம்.** |
| 18 உ | 4 உ | சுக்கிரவாரம் | 2 | கற்பகவிருக்ஷக் காட்சி. |
| 19 உ | 5 உ | ஸ்திரவாரம் | 3 | பூதம், பூதகி, இடும்பவாகனக் காட்சி. |
| 20 உ | 6 உ | ஆதிவாரம் | 4 | நந்தி, காமதேனு, குதிரைவாகனக் காட்சி. |
| 21 உ | 7 உ | சோமவாரம் | 5 | சகோபுர ரிஷபவாகனக் காட்சி. |
| 22 உ | 8 உ | மங்களவாரம் | 6 | யானை, அன்னம், ஆட்டுக்கடாவாகனக் காட்சி. |
| 23 உ | 9 உ | புதவாரம் | 7 | **திருக்கல்யாணவைபவம்;** புஷ்பவிமானம்; வெள்ளி ரதக்காட்சி. |
| 24 உ | 10 உ | குருவாரம் | 8 | குதிரை, கிளி, யானைவாகனக் காட்சி. |
| 25 உ | 11 உ | சுக்கிரவாரம் | 9 | உத்திராடநக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 8-30 க்குமேல் 13-45 க்குள் கடக லக்னத்தில் ரதாரோகணம்; திருத்தேர். |
| 26 உ | 12 உ | ஸ்திரவாரம் | 10 | காலை ஸ்ரீசபாநாயகர் தீர்த்தங்கொடுத்தருளல்; பிறகு பஞ்சமூர்த்திகளும் ரிஷபாரூடராய் எழுந்தருளிக் காவிரியில் தீர்த்தங்கொடுத்தருளல். இரவு அவரோகணம். |
| 27 உ | 13 உ | ஆதிவாரம் | | மௌன உற்சவம். |
| 28 உ | 14 உ | சோமவாரம் | | சண்டேசர் உற்சவம். |

# திருமுறைத் திருநாள்

## 18—5—51 வெள்ளிக்கிழமை

[மாலை 5-மணிமுதல் 9-மணிவரை]

**திறப்பாளர் :**

திவான்பகதூர்,

திரு. T. M. நாராயணசாமி பிள்ளை அவர்கள் M.A., B.L.,

Chairman, Service Commission

**தலைவர் :**

ஸ்ரீ-ல-ஸ்ரீ தெய்வசிகாமணி அருணாசல தேசிக சுவாமிகளவர்கள்,

திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி.

"சம்பந்தர் திருமுறை"

வித்துவான், திரு. S. துரைசாமிஐயர் அவர்கள்,

தலைவர், சிவஞானபாலைய சுவாமிகள் செந்தமிழ்க்கல்லூரி, மயிலம்.

"அப்பர் அருண்மொழி"

திரு. அ. ச. ஞானசம்பந்தன் அவர்கள் M.A.,

தமிழ் விரிவுரையாளர், பச்சையப்பன் கல்லூரி, சென்னை.

"சுந்தரர் திருமுறை"

தருமபுர ஆதீனப் புலவர்,

வித்துவான், திரு. வை. மு. சண்முகதேசிகரவர்கள்,

தலைமைத் தமிழாசிரியர், தேசிய உயர்நிலைப்பள்ளி, நாகை.

---

### "நாட்டுப்பாடல் - நடிப்புப்பாடல்"

குருஞானசம்பந்தர் ஆரம்பப்பாடசாலை மாணவர்கள்,

தருமபுர ஆதீனம்.

## 19—5—51 சனிக்கிழமை

[மாலை 5-மணிமுதல் 9-மணிவரை]

"திருவாசகத்தேன்"

வித்துவான், திரு. நவநீதகிருட்டினபிள்ளை அவர்கள்

தமிழாசிரியர், மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளி, திருநெல்வேலி.

"ஒன்பதாம் திருமுறை"

வித்துவான், திரு. மு. நடராச தேசிகரவர்கள்,

திருவிடைமருதூர்.

"ஞானசம்பந்தம்" ஆசிரியர்,

ஸ்ரீமத். நாகலிங்கத் தம்பிரான் சுவாமிகளவர்கள்,

திருநள்ளாறு தேவஸ்தானம் கட்டளை விசாரணை.

"திருமந்திரம்"

வித்துவான், திரு. ச. தண்டபாணி தேசிகரவர்கள்,

துணைத்தலைவர், பல்கலைக்கல்லூரி, தருமபுரம்.

---

### "திருமுறை உரையாடல்"

ஆதீனத் தேவாரப்பாடசாலை மாணவர்கள்,

தருமபுர ஆதீனம்.

## 20—5—51 ஞாயிற்றுக்கிழமை

[மாலை 5-மணிமுதல் 9-மணிவரை]

" இறையனார் நூல் "

ஸ்ரீமத். மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகளவர்கள்,
திருக்கடவூர் தேவஸ்தானம், கட்டளை விசாரணை.

" பட்டினத்தார் நூல்கள் "

திரு. துரை அரங்கனார் அவர்கள் M. A.,
தமிழ் விரிவுரையாளர், சென்னைப் பல்கலைக்கழகம்.

" அம்மையார் அருள்நூல்கள் "

தருமபுர ஆதீனப் புலவர்,
வித்துவான், திரு. வை. குஞ்சிதபாதம்பிள்ளையவர்கள்,
தமிழாசிரியர், கார்ப்பொரேஷன் உயர்தரப்பள்ளி,
சென்னை.

" கட்டும் விடுதலையும் "

திரு. T. H. விவேகாநந்தம்பிள்ளையவர்கள், B. A., L. T.,
இறைபணியாளர், திருவெண்காடு.

" திருமுருகாற்றுப்படை "

திரு. S. நடராச நாடார் அவர்கள் B. A., B. L.,
டிஸ்ட்ரிக்ட்மாஜிஸ்ட்ரேட், கடலூர்.

## 21—5—51 திங்கட்கிழமை

[மாலை 5 மணிமுதல் 9 மணிவரை]

" சேக்கிழாரும் நாயன்மார் வரலாற்றுக் குறிப்புகளும் "

டாக்டர், திரு. M. இராசமாணிக்கம் அவர்கள்,
M. A., L. T., M. O. L., Ph. D.
தமிழ் விரிவுரையாளர், விவேகானந்தா கல்லூரி, சென்னை.

" பக்தி "

திருப்புகழ்மணி,
திரு. T. M. கிருஷ்ணசாமிஐயர் அவர்கள் B. A., B. L.,
மயிலாப்பூர், சென்னை.

" பெரியபுராணம் "

வித்துவான், ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான்
சுவாமிகளவர்கள்,
தமிழ்விரிவுரையாளர், பல்கலைக்கல்லூரி, தருமபுர ஆதீனம்.

---

## " இசையரங்கு "

தேவார இசைமணி,
சங்கீதபூஷணம், திரு. P. சுவாமிநாதன் & பார்ட்டி,
இசையாசிரியர், தருமபுர ஆதீனத் தேவாரப்பாடசாலை,

## கந்தபுராணத் திருநாள்

22—5—51 செவ்வாய்க்கிழமை

[மாலை 5 மணிமுதல் 9 மணிவரை]

தலைவர் :

திரு. ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் B. A., B. L.,

தமிழ்ப்பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம்.

" கந்தபுராணமும் சைவசித்தாந்தமும் "

வித்துவான், திரு. இளவழகனார் அவர்கள்,

குருகுலம், மாம்பாக்கம்.

" கந்தபுராணத்தில் காவியச்சுவை "

வித்துவான், திரு. கண்ணப்ப முதலியார் அவர்கள் P. O. L.,

தலைமைத் தமிழாசிரியர், கெல்லெட்ஹைஸ்கூல், சென்னை.

" முருகன்பெருமை "

ஸ்ரீமத். இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகளவர்கள்,

திருநெல்வேலிப் பகுதி விசாரணை.

---

[இரவு மணி 9-30 முதல்]

நாடகம்:— விறகுவிற்ற விண்ணவர் பெருமான்.

ஆதீனக் கல்விநிலைய மாணவர்கள்,

தருமபுர ஆதீனம்.

## திருவிளையாடல் திருநாள்

23—5—51 புதன்கிழமை

[மாலை 5 மணிமுதல் 9 மணிவரை]

தலைவர் :

திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்கள் M. A., B. L., M. O. L.,

" செந்தமிழ்ச் சொக்கர் "

தருமபுர ஆதீன வித்துவான், விரிவுரையரசு,

பாலகவி, திரு. வே. இராமநாதன் செட்டியாரவர்கள்,

தேவகோட்டை.

" தடாதகை திருமணம் "

தருமபுர ஆதீனத் தமிழ்ப்புலவர்,

வித்வான், திரு. இராம. கோவிந்தசாமிபிள்ளையவர்கள்,

தலைமைத் தமிழ்ப்பேராசிரியர், அரசர்கல்லூரி,

திருவையாறு.

" தருமிக்குப் பொற்கிழியளித்தது "

வித்துவான், ஸ்ரீமத். மௌன. மகாலிங்கத் தம்பிரான் சுவாமிகளவர்கள்,

திருச்சி மௌனமடம் கட்டளை விசாரணை.

# இராமாயணத் திருநாள்

24—5—51 வியாழக்கிழமை

[மாலை 5 மணிமுதல் 10 மணிவரை]

தலைவர் :

திவான்பகதூர்,
திரு. T. M. நாராயணசாமிப்பிள்ளையவர்கள்; M.A., B.L.,

" கவிஞன் கண்ட கடவுள் "

திரு. ஸ்ரீநிவாசராகவன் அவர்கள் M. A.,
பேராசிரியர், விவேகானந்தா கல்லூரி, சென்னை.

" உயிரோவியம் "

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் M. A.,
"கலைமகள்" ஆசிரியர், சென்னை.

" சிறையிருந்த செல்வி "

தருமபுர ஆதீனப் புலவர், வாசகமணி,
வித்துவான், திரு. S. ருத்திரபதி அவர்கள் M. A.,
தமிழ்ப்பேராசிரியர், ஸெண்ட்ரல்காலேஜ், பெங்களூர்.

" வான்மீகம் "

பிரம்மஸ்ரீ. ய. மகாலிங்கசாஸ்திரிகள்அவர்கள் M. A., B. L.,
தலைவர், பல்கலைக்கல்லூரி, தருமபுரம்.

" அறியாதார் அறியாதார் "

திரு. தொ. மு. பாஸ்கரத்தொண்டைமான்அவர்கள் M. A.,
டெவலப்மெண்ட் ஆபீஸர், தஞ்சை.

---

" கம்பர் இசையரங்கு "

தேரழுந்தூர், திரு. ஸ்ரீநிவாஸாசாரியாரவர்கள்,
மாம்பலம்.

# திருக்குறள் திருநாள்

25—5—51 வெள்ளிக்கிழமை

[மாலை 5 மணிமுதல் 10 மணிவரை]

தலைவர் :

திரு. கஜபதிநாயகர் அவர்கள் B. A., B. L.,

திறப்பாளர் :

திரு. V. S. தியாகராஜ முதலியாரவர்கள், M. A.
வடபாதிமங்கலம் பண்ணை, திருவாரூர்.

" திருக்குறளும் எல்லிஸ் உரையும் "

திரு. பூ. ஆலாலசுந்தரம் செட்டியார் அவர்கள் M. A.,
தமிழ் விரிவுரையாளர், கிறிஸ்தவர்கல்லூரி, சென்னை.

" திருக்குறள் "

சித்தாந்த சிரோமணி,
திரு. T. S. கந்தசாமி முதலியார் அவர்கள் M. A.,
வழக்குரைஞர், சாத்தூர்.

" உவமைநலன் "

வித்துவான், திரு. V. S. குருசாமி அவர்கள்,
தமிழ்ப்பேராசிரியர், பல்கலைக்கல்லூரி, தருமபுர ஆதீனம்.

" வள்ளுவர் உள்ளம் "

ஸ்ரீமத். சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகளவர்கள்,
மாயூரம் குமரக்கட்டளை கட்டளை விசாரணை.

---

[10-மணி முதல் 11-மணி வரை]

வில்லுப்பாட்டு:— தமிழ்வளர்ந்த கதை

மந்திரமூர்த்தி உயர்நிலைப்பள்ளி மாணவர்கள்,
திருநெல்வேலி.

# சாத்திரத் திருநாள்

## 26—5—51 சனிக்கிழமை

[காலை மணி 9 முதல் 12-மணி வரை]

தலைவர் :

தருமபுர ஆதீனப் பிரசாரசோஷ்டித் தலைவர்,

**ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்,**

இராசாங்கக்கட்டளை கட்டளை விசாரணை, திருவாரூர்.

" சிவஞானபோதம் "

தருமபுர ஆதீனப் புலவர்,

**திரு. சு. வச்சிரவேலு முதலியார் அவர்கள் B. A., L. T.,**

கணித ஆசிரியர், பச்சையப்பன்கல்லூரி, காஞ்சிபுரம்.

" சிவப்பிரகாசம் "

தருமபுர ஆதீனப் புலவர், சித்தாந்தரத்னகரம், மதுரகவி,

**திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார் அவர்கள்,**

தலைமைத் தமிழாசிரியர், போர்டு உயர்நிலைப்பள்ளி,
ஆரணி.

## 27—5—51 ஞாயிற்றுக்கிழமை

[காலை 9 மணிமுதல் 11 மணிவரை]

" ஞானனந்தபரிபாஷை "

சைவசித்தாந்த சரபம்,

**காசிவாசி. சிவத்திரு. ஈசானசிவாசாரியார் அவர்கள்,**



---

[மாலை 6 மணி முதல்]

## " இசையரங்கு "

தருமபுர ஆதீன இசைப்புலவர், எட்டயபுரம் சமஸ்தான வித்துவான்,

இசையரசு, தேவாரமணி,

**திரு. எம். எம். தண்டபாணி தேசிகரவர்கள் & பார்ட்டி.**

## 26—5—51

தருமபுர ஆதீன ஸ்தாபகர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

## குருபூஜை விழா.

காலை 11 மணிமுதல்:

**ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் பூஜை.**

நினைவு வெளியீடு :

**திருக்குறள் – உரைவளம்**

**பொருட்பால்.**

## 27—5—51

காலை 11 மணி முதல்:

**ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் பூஜை.**

நடுப்பகல் 1 மணிக்கு:

**மாகேசுவர பூஜை.**

இரவு

**பட்டிணப்பிரவேசம்.**




உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 10] கரஞு சித்திரைமீ 10—5—51. [இதழ் 6

பொன்றயங் கிலங்கொளிர் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்.

## சிவஞானச் செல்வர் திருநாள் :: :: செந்தமிழ் வளர்க்கும் பெருநாள்.

வருகிற வைகாசிமாதம் 12-ம் நாள் ஆண்டுக்கு ஒரு நாள். ஆதீனஸ்தாபகர் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் சிவாத்துவிதமுத்தி யெய்திய நாள். ஆதீனவரலாற்றிலே தனிப்பெருமைவாய்ந்த நாள் இது. சிவஞானச் செல்வர்கள் வாழ்க்கையே அருள் வாழ்க்கை. அவர்கள் சொல்லெல்லாம் வேதம். அவர்கள் செயலெல்லாம் சிவச் செயல். அவர்கள் பரமுத்தி யடைந்தும் உலகிற்கு ஆனந்தத்தை விளைவிப்பார்கள். அவர்கள் அநுபவ வாக்குகள் அன்றன்றைக்கும் புதிது புதிதாக மலர்ந்த பூக்கள்போலப் புதுமணமும் புத்தானந்தமும் அளிப்பன. அவைகள் படிப்பவர்களுடைய அநுபவத்திற்கு ஏற்ப அறிவாழத்தை-தெளிவைப்பயப்பன. அத்தகைய பெருமான்களில் சிறந்தவர்கள் நமது குருஞானசம்பந்தப் பெருமான். அவர்கள் செய்தருளிய அநுபூதிநூல் சிவபோகசாரம், சொக்கநாத வெண்பா, சொக்கநாதக் கலித்துறை முதலியன. இவைகளை அநுபூதி நூல்கள் என்றே கூறித் தோய்ந்து இன்புற்றுக்

காட்டுபவர்கள் நமது வெள்ளியம்பலவாணசுவாமிகள்.
இத்தகைய அநுபூதி நூல்களையாக்கி அறிவுவிருந்தூட்டி
வரும் அவர்கள் நாளைக் கொண்டாடுகிறோம். எப்படி?
ஆசாரியன் எல்லாவகையினும் சிவனேயாதலின், பூசை
செய்து, போற்றிக் கொண்டாடுகின்றோம். தினந்
தோறுமே குருவார்த்தை கேட்டலில் தெளிவு இருக்
கிறது. தினந்தோறுமே குருமேனி காண்டலில் மகிழ்ச்சி
இருக்கிறது. தினந்தோறுமே குருவைத் தியானித்தலால்
மனமாசு அகலுகிறது. அங்ஙனமிருக்க, சிவநிலை
அடைந்த பெருநாளில் அவர்களைத் தியானிக்க - அவர்
கள் அருணூல்களை ஓத - அவர்கள் குறிக்கொண்டிருக்கும்
சிவலிங்கத் திருமேனியைத் தரிசிக்க நாமடையும் பெரும்
பயன் எத்துணையிருக்கும் என்பது எண்ணத்தில்
அடங்குவது ஒன்றோ!

இந்த ஆண்டில்:— குருமூர்த்திகள் உடற் பிணி
போக்கப் பசிமருந்தும், உயிர்ப்பிணி போக்க அருள்
மருந்தும் உதவி வருகின்றார்கள். பசிப்பிணி போக்கும்
முறையிலும் பரமனது தியானம். பசிப்பணியொழிக்க
வரும் அடியார்களை மாகேசுவரனாகவே பாவித்து,
கொண்டுவந்து, மண்டுகாதலின் ஆதனத்திடைவைத்து
அருச்சனை செய்யும் காட்சியாகிய மாகேசுவரபூசை.
உயிர்ப்பிணிபோக்கும் முறை ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம்
அவர்கள் ஞான சிம்மாசனத்து அருட்கொலு இருந்து
அளிக்கும் உபதேச மொழிகள். மற்றும் சாத்திர
தோத்திர இலக்கண இலக்கிய மாநாடுகள் எல்லாம்
அப்படியே.

குருபூஜைத் திருவிழா 17—5—51-ல் தொடங்கு
கிறது. 28—5—51-ல் நிறைவெய்துகிறது. இந்த பத்துப்
பதினொரு நாட்களுமே தோத்திர நாள்களாக-சாத்திர
நாள்களாக - புராண நாள்களாக - திருக்குறள் நாளாக
இருப்பதால் அறிஞர்மேகங்கள் வந்து சொல்மாரி பெய்ய
இருக்கின்றன. தெய்வத் தமிழ்ப்பயிர் செழிக்க இருக்
கிறது. சிவபோகம் விளைய இருக்கிறது. தமிழ்மாநாடு
நுகர இருக்கிறது. சிவமணம்கமழும் தெய்வத் தமிழ்த்
தேன் அருந்தச் சேரவாரும் செகத்தீரே என அனைவரை
யும் அழைக்கிறோம்.

# ஐந்தொழில்

[வித்துவான், திரு. க. சம்பந்தனார், கடலூர்.

ஐந்தொழிலையும் ஆண்டவன் பஞ்ச சத்திகளைக் கொண்டே செய்தருளுகின்றான். சத்தி என்றால் வல்லமை என்பது பொருள். இதனைப் பரஞ்சோதி முனிவர் "பரையாதி, விருப்பு, அறிவு, தொழிலாகி உலகமெலாம் படைத்துக், காத்து, வரையாது துடைத்து, மறைத்து, அருளி" எனக் கூறியுள்ளார். பஞ்சசத்திகள்:--1. பராசத்தி 2. ஆதிசத்தி 3. இச்சா சத்தி 4. ஞானசத்தி 5. கிரியாசத்தி. சத்திகளைக் கொண்டே இறைவன் ஐந்தொழிலாற்றுகின்றான் என்ற உண்மையை அறிவில் குறைவானவரும் உணர, சான்றோர்கள் கடவுளுக்குப் பல சத்திகள் (மனைவி) உண்டு என உருவகப்படுத்தினர் போலும். சத்தியின் துணைகொண்டு ஐந்தொழில் புரியும் அண்ணல் ஓங்காரத்துள்ளொளியாய் ஐந்தெழுத்தில் நின்றாடுகிறான். அதனை இனிக் காண்போம்.

ஐந்தெழுத்து என்பது தொகுதிப் பெயராய சிவாயநம என்ற சொல்லைக்குறிக்கும். வைணவத்தில் எட்டெழுத்து என இருப்பதுபோல, சைவத்தில் ஐந்தெழுத்து என்பது சிவாயநம என்பதையே குறிக்கும். இதனை நமச்சிவாய என மாற்றியும் கூறலாம். முன்னது சூக்கும ஐந்தெழுத்து. பின்னது தூல ஐந்தெழுத்து என்று சொல்லப்படும். இதன் பெருமை விரிக்கிற் பெருகும்.

இந்த ஐந்தெழுத்து, வேதத்தில் நடுவணதாய யசுர் வேதத்தின் நடுப்பகுதியில் உருத்திரத்தின் நடுவில், வேதத்திற்கே உயிராய் விளங்குகிறது. அங்ஙனமே தேவாரத்திலும் அப்பர் அருளிய நான்காம் திருமுறையில் நடுப்பதிகத்தின் நடுச்செய்யுளில் நடுவில் அமைந்து உள்ளது. வடமொழி, தென்

மொழி என இருமொழிக்குமே உயிராக உள்ளது.
இதனைச் சிவப்பிரகாசர் "பரந்த புகழ் மந்திர
வேந்து" எனவே கூறுகிறார். இந்த ஐந்தெழுத்து
கூறப்பெறாத திருமுறைகளே கிடையா. இந்த ஐந்
தெழுத்து ஓதி திருநீறணிதல் வேண்டும் என்று
அப்பமூர்த்திகள் கூறியுள்ளார். ஐந்தெழுத்து ஓது
வார்க்கு அபாயம் ஒருநாளும் இல்லை. ஊழையும்
உப்பக்கம் காணலாம் என்பர் ஔவையார்.
'வழுக்கிவீழினும் உன் திருப்பெயரல்லால் மற்று
நானறியேன் மறுமாற்றம்" என்றார் ஐந்தெழுத்
துண்மை கண்ட சுந்தரர். பொதுவாகச் சைவத்
தலைவர் நால்வரும் அற்புதங்கள் செய்து, சைவத்
தைப் பரப்புவதற்கு ஆதரவாக இருந்தது இந்த
ஐந்தெழுத்தே என்றால் இதன் பெருமையை
யாரால்தான் கூறமுடியும்? இத்தகைய ஐந்
தெழுத்து ஐந்தொழில் புரிந்திடும் அம்பலவாணன்
வடிவில் அமைந்துள்ள நெறியை, இனிக் காண்
போம். முதலில் தூல ஐந்தெழுத்து எங்ஙனம்
அமைந்துள்ளது என்பதைக் கவனிப்போம். நட
ராஜர் வடிவில் ஊன்றிய திருவடியில் ந என்ற
எழுத்துள்ளது. ம என்ற எழுத்து அவர் தம்
வயிற்றிடத்துள்ளது. சி என்ற சிறப்பெழுத்து வளர்
தோளில் காணப்படுகிறது. முகத்தில் வா என்ற
அருளெழுத்து காணப்படுகிறது. முடியில் ய என்ற
எழுத்து காணப்படுகிறது. இம்முறையாக ஐந்
தெழுத்துக்களையும் கொண்டு கடவுள் நடனம் ஆடு
கிறார். இந்த நடனத்தில் பாதாதிகேசமாக ஐந்
தெழுத்துக்களும் அமைந்துள்ளன. இனி, சிவாய
நம என்ற சூக்கும ஐந்தெழுத்து அந்த நடராஜர்
உருவில் அமைந்துள முறையைக் கவனிப்போம்.

உடுக்கை தங்கிய கையில் சி என்ற சிவ எழுத்
தும், வீசி அசையும் கையில் வா என்ற அருளெழுத்



தும், அபயமளிக்கும் கையில் ஆன்ம எழுத்தாகிய ய
என்ற எழுத்தும், இருக்கின்றன. அக்கினி தங்கிய
கையில் ந என்ற திரோதானம் செய்யும் ஆணவ
எழுத்தும், முயலகன்மீது ஊன்றிய திருவடியில் மல
எழுத்தாகிய மகரமும் இருக்கின்றன. இம்முறை
யில் எழுத்துக்களைக் கேசாதிபாதமாகக்; கொண்டு
ஓங்காரமாகிய திருவாசியில் ஞான நடனம் ஒருபால்
ஆண்டவன் ஆடியருள்கிறார். அங்ஙனம் ஆடும்
ஆண்டவனது ஐந்தெழுத்தின் உட்பொருளை
ஆராய்ந்து காண்பாம்.

சி என்பது இறைவனைக் குறிக்கும் எழுத்
தாகும். வா என்பது இறைவியைக் குறிப்பதாகும்.
ய என்பது ஆன்மாவைக் குறிப்பதாகும். ந என்பது
திரோதான சத்தியாகும். ம என்பது மல எழுத்
தாகும். இவ்வைந்தையும் நம் முதலாகச் சொன்
னால் அழியா இன்ப நிலை அடைய முடியாது. சிம்
முதலாகச் சொன்னால் இன்ப நிலை அடையலாம்.
நம் முதலாகச் சொன்னால் இவ்வுலக இன்பத்தை
அடையலாம். உயிர் எழுத்து ய என்பது ஐந்தில்
நடுவில் உள்ளது. இதனை எட்டுமிரண்டும் உருவான
லிங்கம் என்பர் சாத்திர நூலார். அ + உ கூடியது
ய - பத்து. ய - என்பது உயிரின் வடிவம். உயிர்
இறைவனை உணர்தலோடு தன்னையும் உணர்தல்
வேண்டும். இதனை மணிவாசகர் "எட்டினோடிரண்டு
மறியேனையே" என்கிறார். ஆகவே உயிரானது
தன்னை உணர்ந்து, மல மாயைகளின் தன்மை
உணர்ந்து, அவற்றைவிட்டு நீங்கி இறைவியின் திரு
வடியைப்பற்றி, அவளது கிருபையினால் சிவத்தைப்
பெற்று, பின் தாயை மறந்து அச்சிவத்தோடு
இரண்டறக் கலந்து நிற்கும் நிலைதான் ஞான
நிட்டை என்பர் முற்றத்துறந்த பட்டினத்தடிகள்.

யோக நிலையிலே ஐந்தெழுத்து சிவாய என
மூன்றாகி, பின் சிவ என இரண்டாகி, பின் சி என

ஒன்றேயாகி நிற்குமுறையை அனுபவ முறையில் நின்றார்க்குத் தான் அறியமுடியும். முத்தி விரும்புவோர் சிவாயநம என்றும் சிவாய என்றும் சிவா என்றும் கூறலாம். ஆனால் இதற்கெல்லாம் ஆச்சாரியனால் தீக்ஷைபெற்றவனாக இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் உச்சரிக்கும் முறையும் பயனும் கிடைக்கும். சி என்ற முதலெழுத்தை மட்டும் கூறக்கூடாது; அது மகாகாரண பஞ்சாக்கரம். ஆதலின் மனத்தாலேயே தியானித்தல் வேண்டும். இந்த முறையில் ஐந்தெழுத்து ஓதினால், ஐந்தெழுத்து கொண்டு ஐந்தொழில் புரியும் ஆண்டவன் திருவடி சேரலாம் என்பது சாத்திரக்கருத்து.

இதுகாறும் உலகம் தொழில் வளர்ச்சியில் ஈடுபட்டுள்ளது என்பதையும், தொழிலின் விளக்கத்தையும், தொழில் உண்டாதற்குரிய காரணத்தையும், ஆண்டவன் தொழில் புரிதற்கு உரிய காரணத்தையும், அவன் தொழிலாற்று முறையையும், ஒவ்வொரு தொழிலின் நுட்பத்தையும், அவன் தொழில்கள் அவனுருவில் அமைந்துள முறையையும், அத்தொழில் நிகழ்தற்குரிய ஐந்தெழுத்தின் நிலைகளையும், அவ்வைந்தெழுத்தால் ஆன்மா அடையும் இன்பநிலைகள் முதலியவற்றையும் நாம் அறிந்தோம். ஆகவே ஆண்டவன் ஐந்தொழிலின்றேல் உலகமே இல்லை. காணப்படும் உலக அமைப்பினையும் அதன் நிலைகளையும் ஆராய்ந்தால் ஆண்டவன் உண்டென்பதும், அவன் ஐந்தொழில் உடையான் என்பதும், அவ்வைந்தொழிலே எத்தொழிற்கும் மூலமாகும் என்பதும் இக்கட்டுரையால் உணர்ந்தோம். எனவே அவனது ஐந்தொழிற்குட்பட்ட நாம் தியாக உணர்ச்சியுடன் உடல், பொருள், ஆவி மூன்றையும் பிறர்க்கே தந்து பேரா இயற்கை நெறியைப்பெற்று இன்புறுவோமாக.

---

# திருக்குறளாராய்ச்சி

தருமையாதீனப் புலவர்,
திரு. முத்து. சு. மாணிக்கவாசக முதலியார், **ஆரணி.**

திருவள்ளுவர் அருளிய தமிழ் மறையாகிய திருக்குறள் இந்நாளில் எல்லாருள்ளத்தும் ஒவ்வொரு நேரத்திலாவது பொருந்தி நிற்றல் யாவரும் அறிந்த உண்மை. இது நன்றா தீதா என்றாராய்தல் சிலர்க்கேனும் உண்டாம். ஆகவே அவ்வாராய்ச்சியின் முடிவும் அறிஞர்க்கு வேண்டுவதே. அவ்வேட்கை இக்கட்டுரையாலும் சிறிதடங்குதல் கூடும்.

திருக்குறளைக் கற்கவும் கற்பிக்கவும் சில முறை வாய்த்த அடியேனுக்கு அதனையும் ஆசிரியரையும் பற்றிப் பற்பல எண்ணங்கள் அவ்வப்பொழுது தோன்றின. அவற்றை அவ்வாறே குறித்து வைக்காத குற்றம் என்னை வருத்துகின்றது. சென்றதெண்ணி நைவதிற் பயனென்னை! கழிவிரக்கம் கற்றார்முன் தோன்றலாகாதன்றோ?

வேதாகம வுண்மைகளை விரும்பாதவர் திருவள்ளுவரைத் தம் கொள்கைக்குத் துணை செய்பவரென்று கொண்டு திருக்குறளைப் போற்றி வருகின்றனர். அவ்வரவு தமிழறிஞர்க்கு அழியாப் பொருட்செலவாகித் தீராக் கேடுண்டாக்கும். அறம், வருணம், ஆசிரமம், கன்மம், தெய்வம், உயர்வு, இழிவு, நல்வினை தீவினைப் பயன் முதலியவை இல்லை என்னும் தொல்லையர், திருக்குறளை மேற்கொண்டு பொய்யுரையும் பொருந்தாவுரையும் புரட்டுரையும் கூறியும் எழுதியும் வருதல் திருவள்ளுவரையும் திருக்குறளையும் தமிழ்த்தாயையும் அவள் சிறப்பையும் அழிக்கும் பொல்லாங்கிற்கே கங்கணங் கட்டிக்கொண்டதாகும் என்பது சிறிதுங்

கூர்ந்துணராதே பெரிதும் விளங்கும், இதில், திருக்குறளைக்கற்கும் ஆத்திகர்க்கு நினைப்பூட்ட வேண்டிச் சில குறிக்கவிரும்பினேன். இவ் விருப்பம் எள்ளளவேனும் பயனளிக்கும் என்று நம்புகின்றேன்,

திருவள்ளுவர் அறம் பொருளின்பம் வீடு எனப்படும் மக்களுயிர்க்கு உறுதிப்பொருள் நான்கும் உணர்த்துதலைப் பயனுக்கொண்ட நூலை அருளினார் என்பதை எண்ணிவிட்டுத்தான் அந்நூலைத் தொடல் வேண்டும். முப்பாலில் வீடு எங்குளது என்ற வினவும் அதற்குரிய விடையும் ஈண்டுவேண்டா. தனியாராய்ச்சியிற் காணலாம். திருவள்ளுவமாலையில் 'வீடொன்று பாயிரம்' என்றது முதலிய சில உண்மைகளை ஆராய்தல் சாலப்பயன் தரும்.

அறத்தை யுணர்த்திய ஆசிரியர்க்கு அதனின் வேறும் மாறும் படும் பொருள்களுடன் பாடாகா எனல் அறிஞர்க்கும் தோன்றுதோ?

துறக்கம், நரகம், இவ்விரண்டிற்கும் மேலான வீடு மூன்றும் உண்மையை இசைந்த திருவள்ளுவர்க்கும் நாத்திகர்க்கும் எவ்வாற்றால் தொடர்புண்டாகும்? துறக்கத்தை இப்பாட்டிலாவது காணலாம்.

பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு. (58)

புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
ஒப்புரவி னல்ல பிற. (213)

நிலவரை நீள்புகழ் ஆற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு. (234)

கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு. (290)



புகழின்றால் புத்தேணுட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை. (966)

புலத்திலிற் புத்தேணு டுண்டோ நிலத்தொடு
நீரியைந் தன்னா ரகத்து. (1323)

நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்
இல்லெனினும் ஈதலே நன்று. (222)

என்பவற்றுள் எதனை எவற்றை இடைச்செருகலெனத் தள்ளலாம்?

தேவரனையர் கயவர் (1073) அமரருள் உய்க்கும் (121) புத்தேளிர் (58) புலவர் (234) இமையாரின் வாழினும் பாடிலரே (906) எனத்தேவரையும் இமைத்து நோக்கலாம்.

வானகமும் (101) வானத்தவரும் (18,346) இல்லையென்போர்க்குத் திருவள்ளுவரருகில் வர மூஞ்சுண்டோ? இனி கீழிருக்கும் நரகத்திற் கிடப்பாரை யெழுப்புங் குறளாவன:—

உண்ணாமை யுள்ள துயிர்நிலை ஊனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு. (255)

ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்தும் அளறு. (835)

வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழும் அளறு. (919)

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும். (121)

அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை இருள்சேர்ந்த
இன்னா வுலகம் புகல். (243)

என்பவற்றுள் முதற்கண் நிற்கும் மீளா நரகிற்கு மாளா நாத்திகர் மாண்டு ஆளாகா தொழிவரோ?

துறக்கமும் நரகும் உண்டெனக் கொண்டு கூறிய திருவள்ளுவர், அவற்றுள் யாதானுமொன்றனை அடைதற்குரிய காரணங் காட்டாது நிற்பாரோ? நில்லார். அவற்றுட் செல்லுங் காரணங் காட்டியதுமன்றி, அவற்றின் மேலான வீட்டிற் செல்லும் வழியும் உணர்த்தியுள்ளார். உயிர்கள் மண்ணிலிருந்து விண்ணிற் செல்லவும், நரகில் வீழவும், வீடடையவும் வழிகாட்ட வந்தருளிய திருவள்ளுவர் திருவடி மலரை வழிபட்டறிந்தவர்க்கே திருக்குறளினுண்மை யெல்லாம் வெற்றவெளியாகத் தெற்றென விளங்கும் என்று இன்றும் அறிஞர் இசைப்பர்.

துறக்கம் புகுவது என்? இவ்வினவிற்குத் திருவள்ளுவர் பல குறள்களுள் விடையிறுத்தார் 58, 290, 86, 243, 222, 121 முதலியவற்றை நோக்குக. அடக்கம் ஒன்றே அமரருள் உய்க்கும். வேறு நல்வினை வேண்டாவே! அடங்காமை யொன்றே இப்பொழுது நாத்திகரையும் அவர்க்குத் துணைபோன ஆத்திகரையும் மழையில்லாமை முதலிய துன்பம் மிக்க நரகில் வீழ்த்தி வருத்துகின்றது. இவ்வுண்மையை உணர்த்தற் பொருட்டே தோன்றிய கோயில்களையும், மடங்களையும், பிறநலங்களையும் மதப்பற்றில்லாத அரசியலுணர்ச்சி அழித்து வரவில்லையா? மழையிலாத் துன்பத்தைச் செழித்து வரவில்லையோ? தென்னாட்டும் வடநாட்டும் அரசாண்ட தொல்வேந்தரெல்லோரும் வேள்வி பலவும் புரிவித்துப் புத்தேளிரை மகிழ்வித்து மழை வருவித்து நாடு காக்குந் தங்கடன்மையை நன்கு நிறை வேற்றிய முழுவுண்மையை மறைக்க வல்லாருமுளரோ? உளராயின் வருக. அறை கூவி அழைக்கின்றேன். தசரத சக்கிரவர்த்தியாரும், செய்யாத யாகமெல்லாம் செய்து மறந்தானென்று கம்பருள்கின்றார், அது தன்மை நவிற்சியன்றாயினும் உண்மை நவிற்சியன்றென்பார் உத்தமராவரோ? வேள்வி வகையுள் ஒன்றான



விருந்தோம்பலை உடன்பட்ட திருவள்ளுவர்க்கு மற்றவை உடன்பாடல்ல எனல் எவ்வாறுபொருந்தும்? வானோர்க்குச் செய்யுஞ் சிறப்பொடுபூசனையாம் வேள்வியையும் அவிசொரிந்து ஆயிரம் வேட்டலையும், வேள்விப் பயனையும் திருவள்ளுவர் சிறிதேனும் அலட்சியஞ் செய்தாரென்றற்கிடனுண்டோ? ஒன்றனுயிர் செகுத்துண்ணாமை நலத்தை வற்புறுத்து மிடத்தில் வேள்வியை யெடுத்துரைத்த ஒன்றே சான்று பகருமே!

> "..................................
> வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையில்
> நற்பனுவல் நால் வேதத்
> தருஞ் சீர்த்திப் பெருங்கண்ணுறை
> நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
> வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
> யூப நட்ட வியன்களம் பலகொல்
> யாபல கொல்லோ பெரும..........நினக்கே"

என்னும் (15) புறப்பாட்டுகளும் அதன் தலைவன் பெயரடையாகிய 'பல்யாகசாலை' என்பதும் நாடுகாக்கும் அரசற்கு முதலில் வேண்டும் தலைக்கடன் வேள்வி புரிதலே என்பதை இனிது விளக்குதல் அறிக.

> "முறைகோடி மன்னவன் செய்யின் உறைகோடி
> ஒல்லாது வானம் பெயல்" (559)

என்னும் குறளையும், 'மன்னவன் தான் செய்யும் பொருளை முறைதப்பச் செய்யுமாயின், அவன் நாட்டுப் பருவ மழை இன்றாம்வகை மேகம் பொழிதலைச் செய்யாது' என்னும் உரையையும் உற்றுணர்தல் உரியவர்கடனன்றோ?

> "செந்தீ முதல்வர் அறம்நினைந்து வாழ்தலும்
> வெஞ்சின வேந்தன் முறைநெறியிற் சேர்தலும்
> பெண்பால் கொழுநன் வழிச்செலவும் இம்மூன்றும்
> திங்கள்மும் மாரிக்கு வித்து." என்பது பழம்பாட்டு.

"வேதம் ஓதிய வேதியர்க் கோர்மழை
நீதி மன்னர் நெறியினுக் கோர்மழை
மாதர் கற்புடை மங்கையர்க் கோர்மழை
மாதம் மூன்று மழையெனப் பெய்யுமே"

என்பது புதுப்பாட்டு. முன்னது திரிகடுகத்தது. பின்னது விவேகசிந்தாமணியது. இரண்டும் ஒருபொருளாகி முறையே மூலமும் உரையுமாயின.

மழையின்றி மாநிலத்தார்க்கு (வாழ்வு) இல்லை என்பது கண்கூடு. மழையுந் தவமிலார் இல்வழி இல்லை என்பது குருட்டுக் கண்ணர்க்குத் தெரிய வழியில்லை. தவமும் அரசிலாரில்வழி யில்லை என்பதும் அரசனும் இல்வாழ்வார் இல்வழி இல்லை என்பதும் வெள்ளையர் போகுமுன் தொடங்கி இன்றளவும் தாண்டவமாடும் வேண்டாத அநுபவம். இந்நாளில்,

"அறம்புரிந் தன்ன செங்கோல் நாட்டத்து
முறைவேண்டு பொழுதிற் பதன்எளியோர் ஈண்டு
உறைவேண்டு பொழுதிற் பெயல்பெற் றோரே"

"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்
இயற்கை யல்லன செயற்கையில் தோன்றினும்
காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகல் ஞாலம்"

என்னும் அழியாவுண்மைகளை அறிந்து செயலிற்காட்டும் மெய்வேந்தர்க்குச் செய்யுங்கடன் யாதுளது!

துறக்கம் புகுத்தும் தூயவினையே. அதைச் செய்யாமல் விட்டவரை நரகம் புகுத்தும். முன்செய்து பழகிய தூயவினையோ தீயவினையோ யாதுஞ் செய்யாத வுயிர் அத்துறக்கத்தினும் மேலாய வீடு சேரும்.

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்" (346)



என்பதில் குறித்த உலகம் வீட்டுலகம். இதையே 'மலர்மிசை' என்னும் குறளில் 'நிலமிசை' என்றும் 'ஆதாரத்தாலே' என்னுந் திருவுந்தியாரிலும் 'ஆதார யோகம்' என்னுந் திருக்களிற்றுப்படியாரிலும் 'மீதானம்' என்றும் அருளினர். நிலமிசை என்பதைமாற்றி மிசைநிலம் (மீதானம்) என விளக்கிய அருளுதவி போற்றற்பாலது.

இம்முதற் கட்டுரையால், திருவள்ளுவர் துறக்கம், நரகு, வீடு என்னும் மூன்றும் உள்ளன என்று கொண்டு கூறிய வாய்மை உணர்த்தப்பட்டது. இடைப் பிறவரலாயினும் சிறந்ததொரு தொடர்பு நேர்ந்தமையைக் கடைப்பிடித்து, இவ்வறண்ட காலத்தில் மழைவரற்குரிய காரணமும் உண்மைச்சான்று காட்டி விளக்கலாயிற்று.

---

## சுசீந்திரம் தேவாரப்பாடசாலை ஆண்டுவிழா.

6, 7, 8—5—51 ஆகிய மூன்றுநாட்களிலும் நடைபெற்றது. காரைக்குடி திரு. ஆ. முத்துசிவம் M. A., திருவாவடுதுறை ஆதீனமகாவித்துவான் திரு. கே. ஆறுமுகநாவலர், திருவாசகமணி திரு. K. M. பாலசுப்பிரமணியம் B. A., B. L., ஆகியோர்கள் சொற்பொழிவாற்றினர்கள். தருமபுர ஆதீனத் தமிழ்ப் புலவர், வாசகமணி திரு. S. உருத்திரபதி M. A. (மைசூர் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியர்) அவர்கள் தருமபுர ஆதீனச் சார்பில் சென்று முதல்நாள் நிகழ்ச்சியிற் கலந்துகொண்டு 'மணிவார்த்தை' என்பதுபற்றி அரிய விரிவுரை நிகழ்த்திச் சிறப்பித்தார்கள்.

# ஞானாவரண விளக்கமும் : : அரும்பத விவேகமும்.

பதிபசுபாச உண்மைகளை மிக விரிந்தமுறையில் மிகுந்த பாடல்களால் தெளிவுற அறிவிப்பது சிவ ஞானசித்தியார் என்ற அருள்நூல். மெய்கண்டநூல் களுள் இதுஒன்று என்பதும் இதன் ஆசிரியர் சகலாகம பண்டிதரான ஸ்ரீமத் அருணந்திதேவ சிவாசாரிய சுவாமிகள் என்பதும் யாவரும் அறிந்ததே. 'பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச்சித்தியிலே ஓர் விருத்தப்பாதி போதும்' என்று பகுதியும் இதன் பெருமையை அறிவிக் கும். இத்தகைய சிறந்த சாத்திர நூலுக்கு உரையாக எழுந்ததே ஞானவரணவிளக்கம் என்பது. அது சித்தியாரைக் காட்டிலும் பன்மடங்கான பாக்களைக் கொண்டது. அப்பாக்களுக்கு உரையாக - அவ்விளக்கத் திற்கு விளக்கமாக அமைந்துள்ளது அரும்பதவிவேகம் என்பது. இதனை ஆக்கியோர் குமரகுருபரசுவாமிகளின் மாணாக்கரும், தருமபுர ஆதீன அடியார் கூட்டத்தில் தலைசிறந்து விளங்கியவருமான வெள்ளியம்பலவாணத் தம்பிரான் சுவாமிகள். இவர்கள் எழுதிய முத்திநிச்சயப் பேருரையைக் காட்டிலும் இவ்வுரை, பற்பல வடமொழி தென்மொழி நூல்களிருந்தும் மேற்கோள்களைக்கொண்டு விளங்குகிறது. பாஷ்யத்திலும், மிகப்பெரும்பாஷ்யமாக அமைந்துள்ளது. ஆயினும் ஞானவரண விளக்கப் பாடல்களின் முழு உருவம் அறியக் கூடவில்லை. இத் தகைய சிறந்த இவ்விரிவுரைநூல் சில ஆண்டுகளுக்கு முன் தக்கார்களைக்கொண்டு ஓலையிலிருந்து பிரதி செய்விக்கப்பெற்றது: சிற்சில இடங்கள் சிதைந்திருந் தமையால் கிடைத்த அளவுக்கு அப்படியே எழுதப் பட்டுள்ளது. "வேறு பிரதிகள் கிடைக்கக் கூடாமை யினால் திருத்தம்செய்து கொள்வதற்கும் வாய்ப்பில்லை. ஆதலால் பிரதியிலுள்ளவாறே இப்பொழுது வெளியிட லாம்; யாரேனும் அன்பர்கள் இதைக்கண்டபிறகாவது எம்மிடம் ஏடு இருக்கின்றது என்று கூறமுற்படுவார்கள்; வேண்டுமானால் பின்னர் திருத்திக்கொள்ளலாம்" என்று ஸ்ரீ-ல-ஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் ஆணைதர அவ் வண்ணம் சென்றமாத இதழ் முதலாக, இவ்வுரை புத்தக வடிவத்தில் தொடர்ந்து வெளிவருகிறது. வரவர பக்கங் களும் அதிகரித்துக்கொண்டு போகலாம். —ப-ர்.



இலக்கியப்பகுதி:

# கோழிப் போர்.

வித்துவான், திரு. V. S. குருசாமி.
தமிழ்ப்பேராசிரியர், பல்கலைக்கல்லூரி, தருமபுரம்.

அந்தஊர் ஒரு பட்டிக்காடு. பச்சைமரங்களும் இன் னிசைக் கோகிலங்களும் அந்த ஊரையே ஒரு கவிதா சிருஷ்டியாக ஆக்கிக்கொண்டிருந்தன. இயற்கை அவ் வூரைக் கொஞ்சிக் கொண்டிருந்தது.

ஊர் நடுவே பல சிறு தோட்டங்கள். ஒரு வீட்டின் கொல்லைப்புறம். கண்ணுக்கினியாளொருத்தி கவலை தோய்ந்த முகத்தோடு கன்னத்தில் கைவைத்துக் கொண்டு உட்கார்ந்திருக்கின்றாள். அருமையான மலர் ஆதவன் ஒளியில் திரங்கியதுபோன்ற தோற்றம். இள வேனில், குயிலோசை, வெண்ணிலவு அத்தனையும் காதலரோடு இருந்து கொஞ்சிக் குலாவிடும் பேர்வழி களுக்கு இன்பமூட்டலாம். இத்தலைவியின் நிலை இவ் வாறில்லை. இவளோ மதியைக்கண்டு விதியைநொந்து கொள்கின்றாள். தென்றலை நெருப்பு என்கின்றாள்: குயிலோசை இவள் காதைப் பொத்திக்கொள்ளச் செய் கிறது. இயற்கையின் எழில்கள் அத்தனையும், ஏன் வாழ்க்கையேகூட இவளுக்கு வெறுப்பை உண்டாக்கு கின்றன. காரணம்.........?

எதிரே ஒரு குப்பைமேடு. வீட்டுக் குப்பை கூளங்க ளத்தனையும் அதற்குத்தான் சொந்தம். குப்பை களிலுள்ள அரிசி முதலியவற்றைப் பொறுக்கித்தின்ன கோழிகள் கூடியிருக்கின்றன. குப்பைகளைக் கிளறி உண்டுவாழுங்கோழிக்குப் பங்கிட்டுவாழ்கின்ற உணர்வு ஏது? ஒன்றோடொன்று போட்டிபோடுகிறது. போட்டி யின்முடிவு போராக விளைகின்றது. போர். ஆம் போர் தான். இந்தச் சண்டை யாரும் விளைத்துவிட்ட சண்டை யல்ல. இயற்கையாக விளைந்த பூசல். இந்தப்பூசலை விலக்க ஆள் கிடையாது. எளியவர்கள் சண்டையை யார் பொருட்படுத்தப்போகிறார்கள். தானே ஓயவேண்டும். அல்லது ஒருவர் மடியவேண்டும். இந்த நிலைதானே என்றும். கோழிச்சண்டை வலுத்தது. விலக்குவோ ரில்லை. சிறிது நேரத்திற்குள் ஒரு கோழி சுருண்டு விழுந்தது. இப்போர் மிகவும் பரிதாபகரம்.

அவள் கண்கள் அவைகளையே பார்த்துக்கொண்டிருந்தன. வாழ்க்கையில்வருந்திய தன்னிலையும் சுருண்டு விழுந்த கோழியின் நிலையும் ஒன்றாகவே அவளுக்குக் காட்சியளித்தன. மனத்தில் கிடந்த வேதனை மண்டியெழுந்தது. வாழ்க்கையில் வெறுப்பு; சுற்றத்தவர்கள் மீது வெறுப்பு; தோழிமீது வருத்தம். இவைகளெல்லாம் உடனுக்குடன் தோன்றிமறைந்தன.

சிறிது நேரத்திற்குள் தோழி வருகின்றாள். தலைவியின்கவலைசேர்ந்த முகத்தைக் காண்கின்றாள். அருகில் சென்று அமர்கின்றாள்; அழைக்கின்றாள் பதிலில்லை. என்மேல் கோபமா? ஏன் பேசாமலிருக்கிறாய்? என்ன வாட்டம்? என்று கிளறிக் கேட்கின்றாள். தலைவி வேதனையைக் கொட்டி அளந்தபதில் இதுதான்.

என் கண்ணால் யானே கெட்டேன். கண்தந்த காமத்தீ என்புருக்கும் நோயாக ஆயிற்று. தலைவரோ வருதலுமில்லை. அவரைக் காணுதலும் மிக அரிதாயிருக்கின்றது. அதோபார் கோழிச் சண்டையை. தானே விளைந்த சண்டை அது. அதனை யாரேனும் பொருட்படுத்தப்போகிறார்களா? அந்த நிலையில்தான் நானிருக்கின்றேன். என்னுடைய துயர்களை நீக்குவார் இலர் என்று முடிக்கின்றாள்.

குறுந்தொகை என்ற சங்க இலக்கியநூல் காட்டும் காட்சி இது. குப்பைக்கோழிப் போரைவைத்து, தலைவியின் நிலையைச் சித்திரித்த ஆசிரியர்க்கும் அப்பெயரே அமைந்துள்ளது.

"கண்தர வந்த காம ஒள்ளெரி
என்புற நலியினும் அவரொடு பேணி
சென்றுநாம் முயங்கற்கு அருங்காட் சியமே
வந்தஞர் களைதலை யாவராற் றலரே
உய்த்தனர் விடார் பிரித்திடை களையார்
குப்பைக் கோழித் தனிப்போர் போல
விளி வாங்கு விளியி னல்லது
களைவோர் இலை யானுற்ற நோயே."

—குப்பைக்கோழியார்.



யாவள் சகல பூதத்து நித்த வுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துங் கருணை யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துங் கீர்த்தி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்தும் வித்தை யாகி யமர்ந்திடுவள்.

கு-ரை:- நித்தவுரு - அழிவின்மையாகிய வடிவம். அதாவது, முக்காலத்தினும் இருப்பது. கருணை - பிறர் துக்கத்தை நீக்குதலில் இச்சை. கீர்த்தி - புகழ். வித்தை - கல்வி. 10

யாவள் சகல பூதத்துஞ் சிரத்தை யாகி யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்து மிலச்சை யாகி யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்தும் மேதை யாகி யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்தும் சுவாகை யுருவா யமர்ந்திடுவள்.

கு-ரை:- சிரத்தை - வேதாகமப்பொருள்களில் நம்பிக்கை. இலச்சை - ஒருகாரியம் செய்துகொண்டிருக்கும்பொழுது மற்றவைகளில் நினைவில்லாமல் இருப்பது, (வெட்கம்) மேதை - எல்லா நூல்களையும் அறிந்து அவற்றைக் காப்பாற்றக்கூடிய சக்திரூபம், இவள் தியானபத்தினி என்று சொல்லப்படுகின்றாள், புத்திவிசேடரூபம் என்றும் சொல்வர், சுவாகை - இவள் ஓமம் செய்யும் அவிசை தேவர்கள் அடையுமாறுசெய்பவள், சுவாகா சக்தி, மயேசுவர புரத்தில் எழுந்தருளிய தேவிக்கு சுவாகாதேவி என்று பெயர் என்பது தேவிபாகவதம், (29-ம் அத்தியாயம்) சுவாகா என்பது ஆகுதிசெய்யும்பொழுது தேவதையின் பெயர்க்குப் பின் கூறும் மொழி, அழைத்தல் என்னும் பொருளையுடையது என்பர். 11

யாவள் சகல பூதத்துஞ் சுவதை யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துங் குதையி னுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துந் துயிலி னுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்தும் பிரபை யுருவா யமர்ந்திடுவள்.

கு-ரை:- சுவதை: சுவதாசக்தி; பிதுர் தர்ப்பண காலங்களில் உச்சரிக்கப்படுபவள், இவள் பிதுர்க்களைக் குறித்துச்

செய்யும் பூசையை அவர்கள் ஏற்றுக்கொள்ளுமாறு செய்பவள், இவள் இல்லாவிடில் பிதுர்க்களின் பூசை வீணாகும், சுவதை பிதுர் தர்ப்பண மந்திரங்களின் ஈற்றில்வரும் மந்திரமொழி, கொடுத்தல் என்னும் பொருள் தருவது என்பர், குதையின் உரு - பசியின்வடிவம்; உணவிச்சை என்பர், பசியுந் தாகமும் உலோபபத்தினிகள், இவர்கள் எல்லாரிடத்தும் வியாபித்து கவலையுற்றவராக்கி அவர்களால் மரியாதையுடன் புகழப்பட்டிருப்பர் என்பது தேவிபாகவதம். துயிலின் உரு - நித்திரையின் சொரூபம், பிரபைஉரு - வெளிச்சத்தின் வடிவம், பிரபையும் தாஹிகையும் (கொளுத்துதலும்) தேஜஸின் பத்தினிகள். சூரியபிம்பத்தில் தேவி பிரபை என்று பிரசித்திபெற்று விளங்குகிறாள், பிரபை - காந்தி என்பது, தேவிபாகவதம். பிரபாவதி
பிரபாரூபா என்பது லலிதையின் திருநாமங்கள். 12

யாவள் சகல பூதத்தும் பக்தி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துங் காந்தி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்து நீதி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துஞ் சாயை யுருவா யமர்ந்திடுவள்.

கு - ரை:- பக்தி: தேவதைகளிடத்துவைக்கும் விசுவாசம், காந்தி (க்ஷாந்தி): தனக்கு வலிமையிருப்பினும் பிறனுக்கு அபகாரம் செய்யாமை, நீதி: நியாயம். சாயையுரு: நிழல்உருவம்; சமுசார தாபம் இன்மை, மழைக்கு நிகர் சமுசார தாபத்தைப் போக்கக்கூடிய நிழல் உருவமாயிருப்பவள் என்பது பொருள்.

வி - ரை:- காந்தி: அழகின் சொரூபம் என்றும், பிரபஞ்ச வடிவான பரமாத்மாவுக்கு ஆதாரம் என்றும் கூறுவர். இவளைத்
தருமபத்தினி யென்று சொல்லப்படுகிறது. 13

யாவள் சகல பூதத்தும் ரதியி னுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்தும் மிருதி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துந் திருத்தி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்தும் புட்டி யுருவா யமர்ந்திடுவள்.



கு - ரை:- ரதி: சுகவடிவினள்; இரதியின் உருவமானவள். அடியார்களுக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக் கூடியவள், மகாரதி ரதிரூபா என்பன லலிதா தேவியின் திருநாமங்கள். மிருதி: (ஸ்மிருதி): அனுபவித்த பொருளை மறுபடியும் நினைத்தல், நினைவுருவம். இதனை, அனுபூதவிஷயஞானம் என்பர். திருத்தி: திருப்தியின்வடிவம். கிடைத்த பொருள்களில் திருப்தியுண்டாதல். 'பிதிர்க்களும் திருத்தி மன்னினரால்' - செய்யுள் 9, 4-ம் அத்தியாயம் (தேவிமான்மியம்). புட்டி (புஷ்டி): செழுமை; இந்திரிய வளர்ச்சி எனினுமாம். இவள் கணேசனுடைய பத்தினி, இவள் இல்லாவிடில் எல்லோரும் க்ஷீணித்துவிடுவர் என்றது தேவிபாகவதம்.

கிருதி என்பது பாடமாயின் கபிலபத்தினி எனப்பொருள்
கொள்க. இவள் இல்லாவிடில் யாவரும் தைரியம் அடையார். 14

யாவள் சகல பூதத்துந் துட்டி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துஞ் சாந்தி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்து மரியின் பிரியை யாயமர்வள்
யாவள் சகல பூதத்துந் திருட்டிணையா யமர்ந்திடுவள்.

கு - ரை:- துட்டி (துஷ்டி): போன பொருளைக் குறித்து ஆசைகொள்ளாமல் இருத்தல், மகிழ்ச்சியுமாம். தனக்குக் கிடைத்த பொருள்களில் அதிகமான ஆசைவைக்காமலிருப்பதையே ரூபமாக உடையவள். துஷ்டி, ஆதிசேஷபத்தினி. இவள் இல்லாவிடில் எல்லோரும் மகிழ்ச்சியடையார் என்பது தேவிபாகவதம். சாந்தி: இந்திரிய மடக்கல் அல்லது மன அடக்கம் எனினுமாம். இவள் அமைதியை வடிவமாக உடையவள். இவள், அறியாமையை ஒழிக்கும் வடிவமுடையவள் எனவுங் கூறலாம். 'ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல்' என்னும் குறளடி ஈங்கு நினைவுகூரத் தகுந்தது. அரியின் பிரியை - இலட்சுமி, தனதானிய சம்பத்து. திருட்டிணை (திருஷ்ணை): தனதல்லாததை தனதாக்கிகொள்ளவேண்டுமென்ற

ஆசை. விரும்பிய பொருள்கள் அடிக்கடி கிடைத்தாலும் திருப்தியின்மை. 15

யாவள் சகல பூதத்து மிம்சை யாகி யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்துஞ் சக்தி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல பூதத்தும் வியாத்தி யுருவா யமர்ந்திடுவள்
யாவள் சகல லோகத்துஞ் சாதி யாகி யமர்ந்திடுவள்.

கு - ரை:- இம்சை: வதை; உபத்திரவரூபம். சத்தி: சடமும் சேதனமுமாகிய எல்லாப் பொருள்களிலும் வியாபித்துக் கொண்டிருக்கின்ற சடமும் சேதனமுமாகிய சத்திகளின் சொரூபம். பலமே உருவமாக உடையவள். வியாத்தி - வியாபித்தலின் சொரூபம். வியாப்தி தேவி என்பர். சாதி: பசு பட்சி முதலியவற்றின் சாதி உருவம்.

வி - ரை:- சத்தி, காரிய ஜனன சாமர்த்தியம் என்பர். 16

யாவள் சகல பூதத்தும் விருத்தி யுருவா யமர்ந்திடுவள், யாவள் சகல பூதத்து மன்னை யாகி யமர்ந்திடுவள், யாவள் சகல பூதத்தும் பிராந்தி யாகி யமர்ந்திடுவள், யாவள் சகல பூதத்தும் பரமா னந்தமாயமர்வள்.

கு - ரை:- விருத்தியுரு: ஜீவனரூபம், பிழைப்பு வடிவம். அன்னை - மாதா; உற்பத்திக்குக் காரணமானவள். பிராந்தி - அஃது இல்பொருளின் கண் உண்மையாக நினைத்தல், ஒன்றை மற்றொன்றாய் அறிவது, பரமானந்தம் - பேரின்பம். பரமானந்தா என்பது தேவியின் திருநாமங்களில் ஒன்று (லலி 252) 17

யாவள் வணங்கு மவர்விருத்தி ரூப மாகி யமர்ந்திடுவள்
யாவள் சகலா கமங்களினுங் கூறு மன்னை யாயமர்வள்
யாவள் சகல தேவசத்தி யுருவ மாகி யமர்ந்திடுவள்
யாவள் கிரியை யுருவாகி யமர்வ ளவளைப் பணிகுதுமால்.



கு - ரை:- வணங்குமவர் - வணங்குபவருடைய; விருத்தி - வளர்ச்சி அல்லது பாக்கியம். சகல ஆகமங்களிலுங் கூறும் அன்னை - எல்லா ஆகமங்களினுஞ் சொல்லப்பட்டவள். சப்திதா என்பர் வடமொழி வாணர். தேவசத்தி யுருவம் - எல்லா தேவர்களினுடைய சக்திரூபமா யிருப்பவள். கிரியையுரு - தொழில் வடிவம்; கிரியை உத்தியோக பத்தினி. இவள் இல்லாவிடில் உலகம் சோம்பலை அடையும் என்பது தேவி பாகவதம். 18

உரைசெ யிந்தி யங்கடமக் கதிட்டாத் திரியா யுலகெங்கும், வரையா தமருஞ் சிற்சத்தி மாபத்திரைநற் பகவதியே, கரையில் சுபங்க ளெங்களுக்குக் கணத்தி லருளக் கஞ்சமலர், புரையு நினது பதயுகளம் போற்றி போற்றி மிகப்போற்றி.

கு - ரை:- உரைசெய் - மேன்மையாகச் சொல்லப்படுகின்ற. இந்தியங்கள் தமக்கு - ஞானகரணங்களுக்கு; ஞானேந்திரியங்களுக்கு. அதிட்டாத்திரி - பிரேரபணை செய்பவள் அல்லது நிலைக்களனாய் இருப்பவள். சிற்சத்தி - ஞானசத்தி. சத்தி சித்து வடிவமுடையவள் ஆதலினால் உலகம் முழுவதும் வியாபித்து இருக்கின்றாள். மா பத்திரை - சிறந்த மங்கள வடிவமுடையவள். பகவதி - ஐஸ்வரியம் உடையவள். பதயுகளம் - பாதங்கள் இரண்டினுக்கும்.

வி - ரை:- ஞானேந்திரியம் - 'நற்செவி துவக்குக் கண்ணு நாசியைந் தினையுநல்லோர், புத்தியிந் திரியமென்று புகன்றனர்' என்பது சிவஞான சித்தியார். 19

சீற்ற மகிடற் செற்றபினர்த் தேவர் துதிக்கும் பெருந்தேவி, யாற்ற லவுண ரான்மெலிந்தே யடிதா ழெங்க டுயரகற்றி, யேற்ற மிக்க சுபமருளி யெம்மைக் காக்க விக்கணமே, தோற்றி யருள வேண்டுமெனச் சுரர்க ளன்பி னெடும்பணிந்தார்.

கு - ரை:- பெருந்தேவி - பெருமையாகிய தேவியே, செற்றபினர் - அழித்த பிறகு, அவுணரால் - சும்ப நிசும்பர் முதலிய அசுரர்களால், அடிதாழ் - நின் திருவடிகளில் 20
வணங்குகிற.

என்றே சுரர்க ளன்பினொடு மிறைவி தன்னைப்
பழிச்சுதலும், பொன்றோ யமரவாபகையி லாடக்கிரிசை
புறப்பட்டாள், அன்றங் குறைந்த வமரர்தமை யருளி
னோக்கி யுரைசெய்வாள், துன்று நீவிர் துதிதேவி கருணை
நும்பாற் சுரந்தனளால்.

கு - ரை:- பழிச்சுதலும் - தோத்திரம் செய்யவும்; பொன் தோய் - அழகுபொருந்திய; அமரவாபகை - தேவகங்கை, புறப் பட்டாள். கிரிசை - புறப்பட்டுச் சென்றவளான பார்வதி யானவள்; அங்கு - அவ்விமயமலையில், துன்று - நெருங்கிய, நீவிர் துதி - உங்களால் துதிக்கப்பட்ட.

வி - ரை:- பார்வதி, 'நீவிர் துதி தேவி நும்பால் கருணை சுரந்தனள்' என்றதனால், அத்தேவி, பார்வதிதேவியின் அமிச மாகிய மற்றொரு சத்தியாம் என்க. அமராபகை என்னும் வட மொழி தீர்க்க சந்தி, தமிழில் வழங்கும்போது, தமிழிலக்கண முறைப்படி வகரவுடம்படு மெய் பெற்று, அமரவாபகை என்று யிற்று. கிரிசை - இமயமலையரசன் புதல்வியாகத் தோன்றிய வள். சைலேந்தர தனயா-634 லலி. 'இமயத்து அன்றும் பிறந்தவளே' 'இமவான் அளித்த கனங்குழை என்பன அபிராமி 21
அந்தாதி.

அனையாள் பறம்பின் சுதையுடற்கோ சத்தி லுதிப்ப
ளவள்சிவையாம், வினைசேர் தீய வசுரர்தமை வென்றே
நுங்கட் கருள்புரியுந், துனைவி லவட்குக் கௌசிகியா
நாமந் துலங்கு மவடன்பாற், பனிமா திரபுத் திரிதானுங்
கிருட்டி ணையாய்ப் பவமுறுமால்.

கு - ரை:- அனையாள் - நுங்களால் துதிக்கப்பட்ட அத் தேவி, பறம்பின்சுதை - இமயமலையின் புதல்வியாகிய பார்வதி யின்; உடல் கோசத்தில் - உடலாகிய அழகிய வீட்டிலிருந்து



அல்லது சரீரத்தின் மேற்போர்வையிலிருந்து; அவள் சிவையாம்- அவள் சிவையென்னும் பெயருடையவள் ஆவாள். அசுரர்தமை - சும்ப நிசும்பர் முதலிய அசுரர்களை, துனைவில் - விரைவில், கௌசிகியாநாமம்: சரீரகோசத்தினின்றும் தோன்றியதனால் கௌசிகி என்று பெயர். அவள் தன்பால் - அந்தக் கௌசிகியி னிடத்து. பனிமாதிரபுத்திரி - பார்வதியானவள். கிருட்டிணை யாய் - கருநிறமுடையவளாய்; அதாவது, கிருஷ்ணை என்னும் பெயருடையவளாய், பவமுறும் - தோன்றுவாள்.

வி - ரை:- இச்செய்யுளில், பார்வதி, தன்னைப் பிறர்போல் வைத்துப் பறம்பின்சுதை என்றும் பனிமாதிர புத்திரி என்றும் படர்க்கையிற் கூறுகின்றாள். அங்ஙனம், படர்க்கையிற் கூறினும் அது தன்மையே யாகும் என்க. தன்னைப் பிறன்போல் கூறுங் குறிப்பில், 'தன்மையாகுமிடனுமா றுண்டே' என்பது தொல்காப் பிய சூத்திரம். பார்வதி, முக்குணங்களையுமுடையவள். சிவை, அம் முக்குணங்களில் சத்துவ குணத்தைப் பிரதானமாக் கொண்டு தோன்றியவள். சிவையென்னும் கௌசிகையே சும்பநிசும்பர் முதலிய அசுரர்களை அழித்து தேவர்களுக்கு அருள்புரிபவள். அவளே மகாசரசுவதி ஆகின்றாள். பார்வதி, சிவையினிடத்து, தமோகுணப் ப்ரதானையாய் கிருஷ்ணையாகத் தோன்றினாள் 22
என்க. அவளும் பார்வதியேயாம்.

சத்தி யான வனையாட்குக் காலி கையாம் பெயர்
சாரும், இத்தை யுணர்மி னென்றருளி யெழிலார் வடிவ
முடையாளாய்ச், சுத்த விமய கிரியின்மிசைத் துகடீர்
கன்னி விண்டாண்டின், மெத்து மன்போ டமர்ந்தாடிக்
கானம் பாடி மேவினளால்.

கு - ரை:- சத்தியான அனையாள் - பார்வதியாகிய அந்த கிருஷ்ணை என்பவளுக்கு, காலிகை - காளிகை, இத்தை - இதனை; விரித்தல் விகாரம். துகள் - துன்பம், குற்றம். கன்னி - பார்வதி; எல்லா உலகுயிர்களையும் ஈன்றருளிப் பார்வதி கன்னிகையாகவே விளங்குகின்றாள். 'பவன் பிரமசாரியாகும், பான்மொழிக்கன்னி

யாகும்' என்பது சிவஞானசித்தியார். விண்டாண்டில் - ஊசலில், கானம் - இசைப்பாட்டு. மேவினள் - வசித்தாள்.

வி - ரை:- காலிகையே காளி என்று சொல்லப்படுகிறாள். இவள் கருநிறமுடையவள். இக்காளியே மகாகோர ரூபமுடையவளாயும் யாவருக்கும் பயத்தை விளைவிக்கின்ற அசுரர்களுக்கும் மகாடயத்தை விளைவிக்கின்றவளாயும் இருந்தபடியால் காளராத்திரி என்று பெயர் பெற்றனள், என்பது தேவிபாகவதம். இவள் சும்பநிசும்பர்களை நாசம்செய்த தேவியின் சமீபத்தில் இருப்பவள். 'விண்டாண்டு' என்பது விண்ணில் தாண்டுதலுடையது என்றும், காற்றினால் அசைதலையுடையது என்றும் காரணப்பொருள்படும். எழிலார் வடிவமுடையாளாய் என்றும் துகள் தீர்கன்னி என்றும் குறித்தமையால் பார்வதி வேறொரு அழகிய சரீரத்தை எடுத்துக்கொண்டவளாய் ஊஞ்சலில் அமர்ந் 23
தாள் எனக் கொள்க.

நன்ன ரல்லோன் கலைச்சமையிற் சிலவா நியநண்
ணுறவில்லா, வன்ன பருவ மடைந்தனளா யவனி மீது
சரித்தனளாற், றுன்னு பாவ வினைச்சும்ப னிசும்பன்
றொண்டர் தோகைதனை, முன்னங் கண்டார் சண்டன்
மிடன் முண்ட னென கொடியோரே.

கு - ரை:- நன்னர் - நன்மையாகிய; அல்லோன்கலை - சந்திரனுடைய கலைகளின் அளவினவாகிய; சமையில் - (பதினாறு) வருடங்களில்; 'சதச்சமைதான் உடன்று பொருதே' - முதற் செய்யுள், இரண்டாம் அத்தியாயம், தேவிமான்மியம். சில் ஆநியம் - சிலநாள், நண்ணுறலில்லா - சேரப்பெறாத, அன்ன பருவம் - சிலநாட்கள் நிரம்பப்பெறாத பதினாறுட்டைப் பிராயம். அதாவது, பாலைப்பருவம். அவனி - இமயமலையின் கீழுள்ள சரிவாகிய பூபாகம் என்று சொல்லப்படுகின்றது. சரித்தனள் - சஞ்சரித்தாள், தோகைதனை - பார்வதியை, முன்னம் - எதிரில், மிடல் - வலிமை, தொண்டர் - சும்பநிசும்பர்களின் வேலைக்காரர்களாகிய சண்டனும் முண்டனும். தொண்டர்கள் தேவியைப் 24
பார்த்தார்கள் என்பது கருத்து.



உடன் மயங்கின எனக்கொள்க. மற்று இம் மயக்கம் 'அன்ன பிறவும்' என்புழி அதிகாரத்தானே அடங்காதோ எனின், அஃது ஒன்றனோடு ஒன்று பரிமாறும் அதிகாரத்தது; இஃது ஒன்று பலவற்றோடு சென்று மயங்கும் அதிகாரத்தது; ஆகலின் அதனுள் அடங்காது என்ப. (உஎ)

ஏனை உருபும் அன்ன மரபின
மானம் இலவே சொல்முறை யான. 113

என் - எனின், நான்காவதொழித்து ஒழிந்த வேற்றுமை மயங்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: நான்காவது ஒழிந்த உருபுகள் ஐந்தும், நான்காவது போல பல வேற்றுமைப் பொருட்கண்ணும் சென்று மயங்குமிடத்துக் குற்றம் இல்லை. அவ்வாறு சொல்லிவரும் வழக்குமுறைமைக்கண் என்றவாறு.

வழக்கினுள்வேல் கண்டுகொள்க என்பன காணுமையின் காட்டா மரபினவாம். (உஆ)

வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலம் கருவி என்ரு
இன்னதற் கிதுபய னாக என்னும்
அன்ன மரபின் இரண்டொடுந் தொகைஇ
ஆயெட் டென்ப தொழில்முதல் நிலையே. 114

என் - எனின், வினைச்சொல்லிலக்கணம் உணர்த்தல் நுதலிற்று.

இ - ள்: தொழிலினையும், தொழில் நிகழ்த்தும் கருத்தாவினையும, அவனால் செய்யப்படுபொருளினையும், அவன்தொழில் நிகழ்த்தற்கு இடமாகிய நிலத்தினையும்,

அதற்கு இனமாகிய காலத்தினையும், அதற்குத் துணையாகிய கருவியினையும், இன்னாற்கு இவன் என்று சொல்லப்படுகின்ற அப்பொருளினையும், இவனை ஏற்றுக் கொண்டவதனால் பயமாகச் சொல்லப்படுகின்ற அப் பொருண்மையினையும் தொகை செய்து அவ்வெட்டும் என்று சொல்லும் ஆசிரியர், வினைச்சொல் பிறத்தற்கு இடமாகிய பொருளது நிலைமையை ன்றவாறு.

உ - ம்: வனைந்தான் என்பது. இதனுள் எட்டும் வந்தவாறு: வனைந்தானென வனைதல் தொழின்மை விளங்கிற்று. வனைந்தான் என ஒருவனும், வனையப் பட்ட குடம் முதலாய செயப்படுபொருளும் விளங்கின. வனைந்ததோரிடம் அகமானும் புறமானும் விளங்கிற்று. கோலும் திகிரியும் முதலாகிய கருவியும் விளங்கிற்று. வனைவித்துக்கொண்டானும் விளங்கி, வனைந்தான் பெற்றதொரு பயனும் மரபானும் பொருளானும் விளங்கிற்று. பிறவும் அன்ன.

வினையது இலக்கணம் வினையியலுள் கூறற்பாலது, அதனை, ஈண்டுக் கூறியது என்னை எனின், வேற்றுமை களைப் பெயர்க்கே உரிமைசெய்து கூறினமையின் வினையோடு என்றும் இயல்பில என்பது பட்டு நின்றமையின் அவ்வினை வருங்காலும் வேற்றுமைகளோடு வருவது என்பது அறிவித்தற்கு ஈண்டுக் கூறப்பட்டது. கூறிய எட்டிலக்கணங்களுள் வினை என்பது பொருட் குறிப்பால் இரண்டாவதாய்ச் சேர்ந்தது. செய்வது எழுவாயாச் சேர்ந்தது. செயப்படுபொருள் இரண்டாவ தாய்ச் சேர்ந்தது. நிலமும் காலமும் ஏழாவதாய்ச் சேர்ந்தது. கருவி மூன்றாவதாய்ச் சேர்ந்தது. இன்ன தற்கு இது பயனாக என்னும் இவ்விரண்டும் நான்காவ தாய்ச் சேர்ந்தன. இவ்வாறு ஆறுவதும், விளியும் ஒழிய மற்றைய ஆறும் வந்தவாறு கண்டுகொள்க. (உகூ)



அவைதாம்,
வழங்கியல் மருங்கின் குன்றுவ குன்றும். 115

என் - எனின், மேலதற்கோர் புறனடையுணர்த் துதல் நுதலிற்று.

இ - ள்: மேற் சொல்லப்பட்ட எண்வகை இலக்கண மும் வழக்கு நடத்துமிடத்துக் குறைவன குறைந்துவரும் என்றவாறு.

உ - ம்: கொடி ஆடிற்று என்பது.

செயப்படுபொருளும் இன்னார்க்கு என்பதும் இது பயனாக என்பதும் இல்லை. துஞ்சும் என்புழியும் குன்றின உள. பிறவும் அன்ன. (ௌ0)

முதலிற் கூறும் சினையறி கிளவியும்
சினையிற் கூறும் முதலறி கிளவியும்
பிறந்தவழிக் கூறலும் பண்புகொள பெயரும்
இயன்றது மொழிதலும் இருபெய ரொட்டும்
வினைமுத லுரைக்கும் கிளவியொடு தொகைஇ
அனைமர பினவே ஆகுபெயர்க் கிளவி. 116

என் - எனின், ஆகுபெயராமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இ - ள்: முதற்பொருள் ஏதுவாகக் கூறப்படும் சினைப்பொருளை அறியுஞ்சொல்லும், சினைப்பொருள் ஏதுவாகக் கூறப்படும் முதற்பொருளை அறியுஞ் சொல்லும், ஒருபொருள் பிறந்த இடத்தினைச் சொல்ல அவ்விடத்தினால் பிறந்த பொருளை உணர நிற்கும் சொல்லும், ஒரு பண்பினைச் சொல்ல அப்பண்படைந்த

பொருளினை விளங்க நிற்குஞ்சொல்லும், ஒரு தொழிலினைச் சொல்ல அத்தொழில் நிகழ்ச்சியான் அதனை உணர நிற்குஞ் சொல்லும், ஒரு பொருள்மேல் இரண்டு பொருளினை ஒட்டிச் சொல்ல அஃது அப்பொருளினை ஒழிய அதனையுடைய வேறோர் பொருளினை உணர நிற்குஞ் சொல்லும், ஒரு வினையை நிகழ்த்திய கருத்தாவினைச் சொல்ல அதனான் நிகழ்த்தப்பட்டதனை உணர நிற்குஞ் சொல்லும், இவை எழுந்த அம்மரபில் தொக்க தம்பெயர் கூறியவழிக் காரணமாய் நின்றவற்றையே தம் இலக்கணமாகவுடைய சொற்கள் ஆகுபெயர்ச்சொல்லாம் என்றவாறு.

உ-ம்: முதலிற்கூறும் சினையறிகிளவி: கடுத்தின்றான், தெங்கு தின்றான் என்பன. சினையிற்கூறும் முதலறிகிளவி: இலைநட்டு வாழும், பூநட்டு வாழும் என்பன. பிறந்தவழிக்கூறல்: குழிப்பாடி. பண்புகொள் பெயர்: நீலம் என் பல். இயன்றது மொழிதல்: ஏறு, குத்து. இருபெயரொட்டு: பொற்றொடி. இஃது அன்மொழித் தொகையன்றோ எனின், படுத்தலோசைபட்ட வழி அன்மொழித்தொகையாம்; எடுத்தலோசைபட்ட வழி ஆகுபெயராகும் என்பது. வினைமுதலுரைக்குங் கிளவி: தொல்காப்பியம், கபிலம். (௩க)

அவைதாம்,
தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணலும்
ஒப்பில் வழியால் பிறிதுபொருள் சுட்டலும்
அப்பண் பினவே நுவலுங் காலை. 117

என் - எனின், இதுவும் ஆகுபெயர்க்கண்ணே படுத்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: முற்கூறிய ஆகுபெயர்கள் தத்தம் பொருட்கண் ஆங்கால் தாம் முன்பு உணர்த்திநின்ற பொருட்கு



வேறன்றி அதனோடு தொடர்ந்த பொருளோடு பொருந்தி நிற்றலும், அம் முதற் பொருளோடு பொருத்தமில்லாத கூற்றினான் நின்று பிறிது பொருள் உணர்த்தலும் என்று சொல்லப்படுகின்ற அவ்விருவகை இலக்கணத்தினையும் உடைய சொல்லுங்காலத்து என்றவாறு.

உ-ம்: தத்தம் பொருள்வயின் தம்மொடு சிவணல்: தெங்கு, கடு என்னும் தொடக்கத்தன. ஒப்பில்வழியால் பிறிது பொருள் சுட்டல்: குழிப்பாடி, பொற்றொடி என்பன.

இதனாற் சொல்லியது ஒன்றனது பெயரை ஒன்றற்கு இடுங்கால், அம்முதற் பொருளோடு தொடர்பு உள் வழியே இடவேண்டும் என்று கருதின் அது வேண்டுவ தில்லை; அம்முதற் பொருளோடு தொடராது பிறவற்றானும் இயைபுள் வழியும் இடலாம் என்பது கூறியவாறாயிற்று. அஃதேல் இச் சூத்திரப் பொருண்மை மேல் சூத்திரத்து ஓதியவாற்றானே பெற்றாமன்றே எனின், பெற்று நின்றதனையே இவ்வாறு ஒப்பில்வழியும் ஆம் என மாணாக்கனை நன்கு தெளிவித்தற் பொருட்டுக் கூறினார் என்பது. (௩உ)

வேற்றுமை மருங்கில் போற்றல் வேண்டும். 118

இதுவும் ஆகுபெயர்க்கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இ-ள்: அவ்வாகுபெயர்களை ஐ முதலிய ஆறு வேற்றுமைப் பொருண்மையிடத்தினும் இயைபுடைமையைப் பாதுகாத்து அறிதல் வேண்டும் ஆசிரியன் என்றவாறு.

உ - ம்: பொற்றொடி ஆகுபெயர், பொற்றொடியைத் தொட்டான்: பொற்றொடியை என இரண்டாவதன் பொருண்மைத்து. தொல்காப்பியம் என்பது தொல்காப்பியனால் செய்யப்பட்டதென மூன்றாவதன் பொருண்மைத்து. தண்டூண் என்னும் ஆகுபெயர் தண்டூணுதற்குக் கிடந்தது என நான்காவதன் பொருண்மைத்து. பாவை என்னும் ஆகுபெயர் பாவையினும் அழகியாள் என ஐந்தாவதன் பொருண்மைத்து. கடு என்னும் ஆகுபெயர் கடுவினது காய் என ஆறாவதன் பொருண்மைத்து. குழிப்பாடி என்னும் ஆகுபெயர் குழிப்பாடியுள் தோன்றியது என ஏழாவதன் பொருண்மைத்து. பிறவும் அன்ன.

இதனாற் சொல்லியது முன் ஒப்பில்வழியாற் பிறிது பொருள் சுட்டலுமாம் என்றமையின் அப்பிறிது பொருள் சுட்டியவாறு பாகுபாடு பெறுங்கொல்லோ எனின், இவ்வாறு வேற்றுமைப்பொருள் யுள்வழி பெயராவது; பிறவழி யாகாது என்று கூறிய வாறு. (௩௩)

அளவும் நிறையும் அவற்றொடு கொள்வழி
உளஎன மொழிப உணர்ந்திசி னோரே. 119

என் - எனின், இன்னொருசார் ஆகுபெயர் உணர்த்தல் நுதலிற்று.

இ - ள்: அளவுப் பெயரினையும் நிறைப்பெயரினையும் மேற்கூறிய ஆகுபெயரோடு கொள்ளுமிடங்கள் உள என்று சொல்லுவர் உணர்வுடையோர் என்றவாறு.

உ - ம்: நாழி உழக்கு என இவை அளவுப்பெயர்: ஈண்டு இதன் பொருள் அதற்காயிற்றோ எனின், அளக்கப்பட்ட பொருட்கண் கிடந்த வரையறைக்கண் அப்பெயர் பொருட்காயிற்று எனக்கொள்க. தொடி, துலாம் என்பன நிறைப்பெயர்: ஈண்டுவரையறைக் குணர்த்தி



னுன், பெயர் பொருட்காயிற்று என உணர்க. மற்றிவை "கிளந்தவல்ல" என்னும் புறநடையுள் அடங்காவோ எனின், இவற்றை உலகத்தார்க்கும் பெயர்க் குறிப்பு என்று கொள்ளாது அப்பொருட்குப் பெயர்போலக் கொண்டமையின் வேறு கூறினர் எனக் கொள்க. (௩௪)

கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே. 120

என் - எனின், மேற்கூறிய ஆகுபெயர்க்கண் மேல் எடுத்தோதின வல்லாதன வேறு பல தோன்றினும் அவ் வெடுத்தோதப்பட்டவற்றின் இயல்பினானே உணர்ந்து கொள்க என்றவாறு.

உ - ம்: யாழ்கேட்டான், குழல் கேட்டான் என அவற்றினாகிய ஓசைமேல் நின்றன. பசுப்போல்வானைப் பசு என்ப, பாவைபோல்வாளைப் பாவை என்ப. இனி ஒன்று, பத்து, நூறு, ஆயிரம் என்னும் எண்ணுப் பெயர்களும் வரையறைப் பண்பின் பேர்பெற்ற ஆகுபெயர் எனக்கொள்க. அவ்வெண்ணுப்பெயரின் அறிகுறியாகிய அலகுநிலைத்தானங்களும் அப்பெயரவாயின எனக்கொள்க.

இனி அகரமுதலாகிய எழுத்துக்களை உணர்த்துதற்குக் கருவியாகிய வரிவடிவுகளும் அப்பெயரவாம். தாழ்குழல், திரிதாடி என்பன இருபெயரொட்டு இன்மையின் ஈண்டே கொள்க. மண்ணுடைய கலத்தை மண் என்றும், பொன்னுடைய கலத்தைப் பொன் என்றும் இவ்வாறே காரணத்தின் பெயரினைக் காரியத்துக்கு இட்டும் கடிசூத்திரத்திற்காக இருந்தபொன்னைக் கடிசூத்திரம் என்றும் தண்டூணுதற்குக் கிடந்த மரத்தினைத் தண்டூண் என்றும் இவ்வாறே காரியத்தின் பெயரினைக் காரணத்திற்கு இட்டும் வருவன எல்லாம் கொள்க.

இனி எழுத்து எனவும் சொல் எனவும் கூறிய இலக்கணங்களைக் கூறிய நூல்மேல் ஆகுபெயராய் வருவனவும் ஈண்டே கொள்க. வேறு என்றதனுன் அவ் ஆகுபெயர்கள் தொல்காப்பியம், வில்லி, வாளி என ஈறுதிரிந்தனவும் ஈண்டே கொள்க. இவ்வாகு பெயரை இவ் வோத்தினுள்……………துவும் எழுவாய் வேற்றுமை மயக்கமாகலின் ஈண்டே கூறினார் என்பது. (நரு)

வேற்றுமை மயங்கியல்

முற்றும்.

---

ரு. விளிமரபு.

விளிஎனப் படுப கொள்ளும் பெயரொடு
தெளியத் தோன்றும் இயற்கைய என்ப. 121.

இவ் ஓத்து என்ன பெயர்த்தோ எனின், விளிமரபு என்னும் பெயர்த்து. மேலோத்தினோடு இவ் வோத்திடை இயைபு என்னை எனின், மேல் "வேற்றுமை விளியோடு எட்டே" என நிறுத்தார்; அங்நிறுத்த முறையானே விளியொழித்து அவ்வேழும் உணர்த்தி இனி ஒழிந்துநின்ற விளியை உணர்த்துகின்றார் என்பது.

இம்முதற்சூத்திரம் என்னுதலிற்றோ எனின் விளி வேற்றுமையது பொது இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று என்றவாறு.

இ - ள்; விளி என்று சொல்லப்படுவன தம்மை ஏற்கும் பெயரொடு யாப்புறத் தோன்றும் தன்மைய என்று சொல்லுவர் புலவர் என்றவாறு.



இனி வாமாதிகளை அகப்புறச்சமயமென்றதென்னையோவெனின்? சௌமிய சைவாசார விரோதமான மத்ஸ்ய மாமிசாதி சேவைகளாற் சுத்த சைவர்க்குட் கொள்ளவாராமையின், அது சுப்பிரபேதத்தில்,

वामं च दक्षिणं चैव तद् द्वयोर्मिश्रकं तथा ।
शैवा बाह्यार्थमाख्याताः शैवा अपि न पूजिताः ॥

எனவருமாற்றானுணர்க. இனி "வாமநெறிபல" என்றது,

वामं तु त्रिविधं प्रोक्तमनादिः पूर्वपश्चिमम् ।

என சிந்தியவிசுவ சாதாக்கியாதிகளிற் பலபடக் கூறுதலின். ஈண்டு, 'ஒருவகையானென்ப' தென்றது வாமிமதமுதற் சித்தாந்த வாமி மத மீறானவற்றை என்க. அவை மேல் விளங்கும். (3)

4. * * *

இனி, உலகர் என்பது, காணாபத்தியமதமுமறுப்புங் கூறுகின்றது. ஈண்டுலகரிடையூறு தவிர்ப்பது,

वागीशाद्याः सुमनसः सर्वार्थानामुपक्रमे ।
यं नत्वा कृतकृत्याः स्युः तं नमामि गजाननम् ॥

என்றற்றொடக்கத்தால் உணர்க. ஒறுத்திருவர் மனைவியரைக் கவர்தல் அரியயன்றேவிமாரைக் கவர்ந்து தம்மிருபக்கத்தும் வைத்துக்கோடல். பல பொருளினொடு மாலையெறிதல் ஒரு காலத்துக் கடலையும் அங்குள்ள பொருள்களையும் துதிக்கையாற் கவர்ந்து மீளச் சிதறுமளவில் அரி தனக்குரியதெனத் தேடி யெடுத்துச் சக்கரங் காணாது அதுபெற விநாயகர்முன் கூத்தாடிப் பெற்றது. மற்றும் பரியதேர் அச்சொடிதல் சிவன்

முப்புரமழிக்கத் தொடங்கும்போ திவர்க்குப் பிரீதிபண்
ணமையிற் றேரின் அச்சொடியச் செய்தல்.

தச்சு விடுத்தலுந் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென் றுந்தீபற
அழிந்தன முப்புர முந்தீபற. —திருவா, உந்தி.

என்றது மிதுபற்றி. பின்னர்ச் சிவன் நினைத்து,

ओङ्कारममृतं ब्रह्म शिवमक्षरमव्ययम् ।
यमामनन्ति वेदेषु तं प्रपद्ये विनायकम् ॥

என்பது முதலிய ஸ்தவராஜத்தாற் பூசித்த பின்னர்
அரி விடையாகத் தாங்கலுந் தேரியல்பு நின்று புர
மெரித்ததெனச் சிவபுராணம் கூறுமாற்றானுணர்க.
தலைவனிவ னெனமூலத் துறைதலாவது,

मूलाधारे चतुष्पत्रपद्ममध्ये विनायकम् ।
गजवक्त्रं च रक्ताभं त्रिनेत्रं च महोदरम् ॥

என்றித் தொடக்கத்தன ஆகமங் கூறுதலின். அது
சத்தியபிவியத்தித்தான மாகலினுண்டே சிவாபிவியத்
தித் தானமுமாதல்பற்றி (முதல்வ)னுகிய தலைவனிவ
னென்பது கருத்து. தகுதி பிறவற்று மென்றது காண
பத்திய தந்திரம் கூறும் பலவற்றானுமென்பதற்கு. (4)

5. * * *

தானவரைக் கொன்று என்பது கௌமார மதமு
மறுப்பும் கூறுகின்றது. ஈண்டு, தானவரைக் கொன்ற
தும் மற்றும் கந்தபுராணத்தும் பிறவற்றுங் காண்க.
சதுர்முகனைச் சிறை வைத்தது பிரணவத்தின் பொருள்
தெரியாமையின். அது வருமாறு:- காஞ்சிமான்மியத்தில்



குமரகோட்டம்பற்றிய இயைபில் சுப்பிரமணியரைக்
குறித்துப் பிரமன் கூறியது,

हृदयकमलमध्ये दीपवद्वेदसारं
प्रणवमयमतर्क्यं योगिभिर्ध्यानगम्यम् ।
हरिगुरुशिवयोगं सर्वभूतस्थमेकं
सकृदपि मनसा मां ध्यायते यः स मुक्तः ॥

एतावदद्य विज्ञातमाद्यस्यार्थोऽक्षरस्य च ।
मां विमोचय देवेश सुब्रह्मण्य नमोऽस्तुते ॥

என்பது. பிறகு சிவன் கூற்று,

प्रणवस्य महार्थस्य मत्परस्य मनोरसौ ।
मत्पुत्रवाचकस्यैष श्रुतिदृष्टस्य सर्वशः ॥
ईशानः सर्वविद्यानां भूतानामहमीश्वरः ।
ब्रह्माधिपो ब्रह्मणश्च ब्रह्म सोऽहं सदाशिवोम् ॥
अथवा सर्वयज्ञेषु सुब्रह्मण्योमिति क्रिया ।
अहं च मम पुत्रश्चाप्योङ्कारार्थौ श्रुतौ श्रुतेः ॥
इममर्थं न जानाति कथमेष विधिः स्मृतः ।
विमोच्यश्च कथं त्वेष तन्मया वद कामराट् ॥
तथाप्यहं विधातारं मोचयिष्ये कृपाबलात् ।
प्राहिणोदथ नन्दीशं सुब्रह्मण्यान्तिकं शिवः ॥

என்பது. இவை முதலியவற்றானும் முன்னர்ப் பிரமமத
மறுப்பிற்காட்டிய வசனங்களானு முணர்க. பன்றி
யெனத் திருமாலான பொழுதடாததென்பது முன்னர்
வைணவமத மறுப்பில் வீரபத்திரர் நாரசிங்கத்திற்
குரைத்தது,

विवृतस्कन्धदंशेन दंष्ट्रोत्पाटनपीडितं ।
वराहविग्रहस्तेऽद्य साक्रोशस्तारकारिणा ॥

என வருமாற்றானுமுணர்க.

'எங்கும் நொடியிற் சுற்றி' என்றது சிவன் கையி
லுள்ள பழத்தை விநாயகரும் முருகவேளும் கேட்டள
வில் பிரமாண்டகடாஹத்தை நொடியிற் சுற்றி வந்தவ
னுக்குக் கொடுப்போம் என்றுழி அவ்வாறு சுற்றிவந்த
வதிசயந்தோன்ற. இதன் விரிவு சிவபுராணத்திற்
கண்டுகொள்க. அம்பிகையைப் பயமாரப் போரிற்
காத்தல் தேவி தெண்டி முண்டி என்னுமிருவரையும்
சங்கரிக்கப் போர்புரிகாலைச் சிறிது வருத்தந் தோன்
றுழிச் சிந்தித்தவுடனே சென்று வருத்தந்தீர அவ்
விருவரையுங் கொன்று தேவிக்குபகரித்தல். இதுவும்
மூலபுராணம் கூறும். ஈண்டெழுதிற் பெருகும்.

'கானமருங் கொன்றை யணிவார்க்குபதேசித்தல்'
முற்கூறியவாறே பிரணவப்பொருளைச் சிவன் கேட்டள
விற் சிவனுக்குரைத்தது. அதுவு முன்னர்ப் பிரமமத
மறுப்பில் உதாகரித்த சிவரகசிய கண்டம் கூறுமாற்றா
னுணர்க. இதனானேயன்றே அருணகிரிநாதர்,

'முக்கட்பரமர்க்குச் சுருதியின்
முற்பட்டது கற்பித் தருளிய' —திருப்புகழ்.

என்றதூஉம். மற்றனைத்து மறுப்பும் வெளி. மற்றனைத்
தென்றது கௌமார தந்திரம் கூறுவனவும் கொள்ள;
அதிகாரமுறையான் முற்கூறிய 'பிறவற்று' மென்ற
தீண்டும் இயையு மென்பதனால். இவ்வாறு அயனரியர
னுடைய விஷயத்திலுஞ் சிறந்த செய்கையுண்டாகலின்
மற்றவற்றிற் கேட்கவேண்டாமையின், இவ்விருவருஞ்
செகத்கருத்தா ஆவரென பரமதவாதிகள் கூறுவர்



அதை ஈண்டு வைத்து மறுத்தவாறு. இவ்விரு மதத்
திற்கும் உத்தேசமின்றாம் பிறவெனின் அது வருமாறு:-
சுவச்சந்தத்தில்,

यन्न दृष्टं पशुज्ञानैः कुपथभ्रान्तदृष्टिभिः ।
यन्न सांख्यैर्न योगैर्वा न च वै पाञ्चरात्रिकैः ॥
स्वभाववादिभिश्चापि न च कर्मप्रवादिभिः ।
नापि संशयवादैश्च न च क्षपणवादिभिः ॥
न भूतवादिभिश्चैव नापि स्याल्लौकिकैरपि ।
न चात्मचिन्तकैर्वापि षट्पदार्थपरायणैः ॥
न चापि न्यायवादैश्च हेतुदृष्टान्तवादिभिः ।
नाप्येकजन्मवादैर्वा नानाप्येकत्रवादिभिः ॥
न धौर्तवादैर्लौकैर्वा न परिज्ञातमक्षरम् ।
इत्येवं वादिनां तेषां भेदानां तु शतत्रयम् ॥
त्रिषष्टिरधिकाश्चान्यवादिनां भ्रान्तचेतसाम् ।
अज्ञानतिमिरान्धानामुन्मीलनकृदुत्तमम् ॥
संसारपङ्कमग्नानां तमोनुदमिदं परम् ।
परमेशमुखोद्गीर्णं यन्मया प्रोक्तमद्भुतम् ॥

எனக் கூறியவற்றுள் இவ்விரண்டும் உளவெனக்
கொள்க. (5)

6. * * *

நன்றுணர்ந்து முத்திபெற என்பது முன்னிறுத்த
முறையானே அகச்சமயத்துக்குப் புறச்சமயமானவற்
றுள் வாமபேதம் கூறத்தொடங்கி முதற்கண் வாம
மதத்தின் பொதுவியல் கூறுகின்றது. ஈண்டு வாம
மென்றது சாம்பவத்தை. அது,

वामं हि शाम्भवं शास्त्रं दक्षिणं भैरवात्मकम् ।
मिश्रं यामलमित्युक्तं सप्तमातृप्रधानकम् ॥

என்பதனுலறிக.

शैवं पाशुपतं वामं भैरवं तु महाव्रतम् ।
कालामुखमिति ख्यातमन्तः समयषट्ककम् ॥

என அசிதாகமம் கூறும் ஆறனுள் யாமளம் கூறிற்றில்லையாலோ எனின், மிசிரம் என்பது வாமபைரவத்துள் அடங்குதலின் வேறு கூற வேண்டா என்க. இனி நவயாமளமாமாறு, ஞானசித்தியில்

नवशक्तिविधिप्रोक्तं नवमूलं तु यामलम् ।
तच्छाक्तं शाम्भवं शैवं तत्तत्त्वं सिद्धिशाम्भवम् ॥
मूलागमं तु सन्मार्गं सहमार्गं शिवागमम् ।
सन्मार्गं सहमार्गं च मूलेदिव्यागमोदितम ॥
नवागमरहस्यार्थोद्भवोऽष्टाविंशतोदयः ।
शक्त्युक्तं यामलोद्भेदं नवभेदमनेकधा ॥

என்னும் வசனத்தால் உணர்க. நவாகமமாவன.

1. पारतत्त्वरागमम 2. परमागमम् 3. शिवागमम
4. शाक्त्यागमम् 5. कलागमम् 6. देवप्रसादम्
7. पारतन्त्रावतारम् 8. शिवाज्ञासारम् 9. शिवसादाख्य-
प्रसादम ।

எனவரும். பிறவும் உளவேற் காண்க. இவை கூறும் சித்தாந்தமும் ஒன்பது வகையாம். அவை:—

नवधा चेति संप्रोक्तो नवतन्त्रैकगोचरः ।
वामश्च मन्त्रवादश्च यन्त्रवादस्ततःपरम् ॥



तथा चौषधवादश्च कर्मवादस्तथैव च ।
अद्वैतवामसिद्धान्तो द्वैतवाममतः पुनः ॥
मिश्रवाममतः पश्चाद्वामसिद्धान्त इत्यपि ।

என்னும் வசனங்களால் அறியப்படுவன. இவை அனைத்தும் சங்கிரகமாக மூவகைப்படும் எனவும் வரும்;

वामं तु त्रिविधं प्रोक्तमनादिः पूर्वपश्चिमम् ।

எனச் சிந்தியவிசுவசாதாக்கியம் கூறலின். இம்மூன்றும் வேறொருவாற்றால் வரும் பேதம் என்பாரும் உளர். பிறவும் அறிக. இனி உலோகாயதாதி புறச்சமயமாமாறு:

न्यायो वैशेषिकश्चैव बौद्धश्चैवार्हतस्तथा ।
लोकायतश्च साङ्ख्यश्च मीमांसो वैष्णवस्तथा ॥
न्यायाद्यष्टक भेदोऽयं बहिःस्थः समयार्थकः ।

இனி, பைரவ முதலாகிய அகச்சமயமாமாறு:

शैवं शिवाद्वयं चैव शिवसंमेलनं त्रिधा ।
पश्चात्पाशुपतं चैव कालामुखमहाव्रतम् ॥
वामभैरवयोर्भेदाः शैवस्याभ्यन्तराष्टकः ।

எனச் சித்தாந்தங் கூறுமாறே வாமத்தினும் கண்டு கொள்க. ஈண்டு வாமம் என்றது வாம சித்தாந்த மொழிந்த பூருவபக்ஷமாயுள்ள வாம பேதங்களை; சௌமிய சைவத்தில் ஞானாந்தமொழிந்த பூருவபக்ஷமாயுள்ள கர்மாந்த பேதங்களைப்போல. மற்றும் விரித்துக் கொள்க. (6)

7. * * *

............ல நவதந்..........னென்பது வாமிமதமும் மறுப்புங் கூறுகின்றது. ஈண்டு உலகிற்கெல்லாம் பதி சத்தியன்றிப் பிறரில்லை என்றதற்கு வசனம் சுவச்சந் தத்தில்,

ब्राह्मी च वैष्णवी शक्तिरधिकारवहा मता ।
यमधिष्ठाय चात्मानं तत्संज्ञां संप्रपद्यते ॥
तद्विकारं च कुरुते शक्तिर्या पारमेश्वरी ।
ब्रह्मविष्णिवन्द्ररुद्राश्च विद्येशा ईश्वराः शिवाः ॥
लोकपालाष्टमूर्तीशा मूर्त्याधीपगणेश्वराः ।
लोकाधिपाश्च देवेशि तथैव भुवनाधिपाः ॥
ग्रहादिरुद्रमातारो योगनक्षत्रराशयः ।
शक्तिसंज्ञास्तु ते सर्वे भवन्ति तदधिष्ठिताः ॥
तत्पराक्रमवीर्यास्तु स्वकीये तु पदे स्थिताः ।
शक्त्यधिष्ठितचैतन्याः साकाराः क्रिययोद्यताः ॥

என வருமாற்றான் உணர்க. இவ்வாறு வரும் விரிவு வாம தந்திரத்திற் கண்டுகொள்க. சிவனென்று சொல்லுவதும் சத்தியைத்தானே என்பதற்கு வருமாறு:

जगच्छक्तिमयं व्याप्तं जगच्छक्तिमयं शिवम् ।
जगदुत्पद्यते शक्तेः शक्तिस्तु परमः शिवः ॥

என்பது. வாலறிவின் வழிபடவே முத்தி வரும் என்புழி முத்தி சித்திக்கும் உபலக்ஷணம். அது,

जन्तोरपश्चिमतनोः सति कर्मसाम्ये
निःशेषपाशपटलच्छिदुरा निमेषात् ।
कल्याणि देशिककटाक्षसमाश्रयेण
कारुण्यतो भवति शाम्भवदेवदीक्षा ॥

ஈண்டுக் கூறிய சாம்பவதீக்கை சாத்த தந்திரத்தை யனுசரித்தது.





வாலாஜாபாத் இந்துமத பாடசாலையைச் சேர்ந்த வள்ளலார் ணவ இல்ல புதுக் கட்டிடத்திற்குக் கால்கோள் விழா ஆற்றிய ாது எடுத்தபடம். கால்கோள் விழா ஆற்றிய சென்னைமாகாண விடைரக்டர் இராவ்பகதூர் வி. ஆர். அரங்கநாத முதலியார் அவர் நம் டெபுடி டைரக்டர் திரு. என். சுந்தரவடிவேலு எம். ஏ. எல் டி. ர்களும் படத்தில் காணப்படுகிறார்கள்.

## மாயூரத்தில் வான்மீகிதினக் கொண்டாட்டம்

மாயூரம் அமர பாரதி சபையின் ஆதரவில் 15—4—51ல் ண்டாடப்பட்டது. தர்மபுரம் ஆதீனம் கீழ்த்திசைப் பல்கலைக் லூரித் தலைவர் பிர்மஸ்ரீ ய. மகாலிங்க சாஸ்திரிகள் M. A., B. L., மை வகித்தார்கள். ஹிந்து பத்திரிகை துணையாசிரியர் பிர்மஸ்ரீ நாதய்யர் 'வால்மீகியின் ஆர்ஜவம்' என்பதுபற்றித் தமிழிலும் மபுரம் ஆதீனக்கல்லூரி வடமொழிப் பேராசிரியர் பிர்மஸ்ரீ K. கோபால சாஸ்திரிகள் 'ராமாயணத்தில் காலவிமர்சம்' என்பது வடமொழியிலும் சொற்பொழிவாற்றினார்கள். போட்டிப் களில் கலந்துகொண்டதருமபுர ஆதீன ஆகம பாடசாலை மாணவர் ல் T. S. கணேசன் பரிசு பெற்றுள்ளார்.

## தூத்துக்குடியில் சைவசித்தாந்தசபை ஆண்டுவிழா

12, 13—5—51 ஆகிய இரண்டு நாட்களிலும் மேற்படி வி
ஈரோடு கலைமகள் கல்வி நிலைய ஆணையாளர் திரு. S. மீனாட்சி சுந்
முதலியார் B, A. L, T. அவர்கள் தலைமையில் நிகழும். பாகனே
திரு. மு. காசி விசுவநாதன் செட்டியார் அவர்கள் அவை
தொடங்கி வைப்பார்கள். அம்பாசமுத்திரம் திரு. அ. முத்துக்கும
சாமிப்பிள்ளை, கொடுமுடி திருமதி. K. A. முத்துலட்சுமி அம்மைய
அண்ணாமலைநகர் சித்தாந்த கலாநிதி திரு. ஔவை சு. துரைசா
பிள்ளை, பூரிசை திரு. சு. முருகேசமுதலியார், சென்னை திரு. திருநா
கரசுப்பிள்ளை. சாத்தூர் சித்தாந்த சிரோமணி. திரு. T. S. கந்தச
முதலியார் M. A., சென்னை ஸ்ரீமதி. E. T. இராஜேஸ்
அம்மையார் M. A., L. T., ஆகிய பலர் சொற்பொழிவாற்றுவார்க

## தமிழ்சங்கப்புலவர் மாணவர்தேர்வில்............

விகுர்தி ௵ மாசித் திங்களில் திருநெல்வேலி தென்னிந்
தமிழ்ச்சங்கச் சார்பில் நடைபெற்ற தமிழ்ப்புலவர் மாணவர் பரீ
எழுதிய தருமபுர ஆதீனம் கீழ்த்திசைப் பல்கலைக் கல்லூரி மாண
கள் யாவரும் சிறந்த முறையில் தேற்சி பெற்றுள்ளார்கள். அ
வித்துவான் முதனிலை (Preliminary) வகுப்பு மாணவர்
சிங்காரவேலன் இரண்டாம் பரிசு பெற்றுள்ளார்.

## ஆச்சாபுரத்தில் பிரமோத்ஸவம்

தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான ஆச்சாபுரம் ஸ்ரீ
லோகத்தியாகராஜசுவாமி தேவஸ்தானத்தில் 11—5—51 மு
24—5—51 முடிய பிரமோத்ஸவம் நடைபெறும். 23—5—51 அ
திருஞானசம்பந்தசுவாமிகள் திருக்கல்யாண ஐக்கிய உற்சவம் நிக
நாடோறும் அறிஞர்கள் பலர் சொற்பொழிவாற்றுவார்கள்.

Printed & Published by K. Sundaresa Iyer, Agent, Dharmapuram Adhinam a
Gnanasambandam Press, Dharmapuram, (Mayavaram) 9—5—1951.

